

பக்தாம்ருதம் விச்வஜநாநு மோதநம்
ஸர்வார்த்ததம் ஸ்ரீசடகோப வாங்மயம்
ஸஹஸ்ரசாகோபநிஷத் ஸமாகமம்
நமாம்யஹம் த்ராவிட வேதஸாகரம்

[தொண்டர்களுக்கு அமுதமாக விளங்குவதும், எல்லா மக்களையும் மகிழ்விக்கச் செய்வதும், எல்லா புருஷார்த்தங்களையும் தரவல்லதும், ஆயிரக்கணக்கான பகுதிகளையுடைய உபநிடதங்களின் திரண்ட கருத்தாக அமைந்திருப்பதும் ஆகிய நம்மாழ்வாருடைய ஸ்ரீசூக்திமயமுமான தமிழ்வேதக்கடலை அடியேன் வணங்குகின்றேன்.]

--(தனியன்)

# ஸப்தகிரி

ஜுன் - 1995

தனிப்பிரதி ரூ. 2 மலர் 26

வருடச்சந்தா ரூ. 24 இதழ் 1





பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீபத்மாவதி தாயார் - உத்ஸவர் திருச்சானூர்.

முதல் உள்ளட்டை : ஸ்ரீநம்மாழ்வார்

2-வது உள்ளட்டை : கருட சேவை, ஸ்ரீகோவிந்தராஜசுவாமி கோயில் பிரம்மோத்ஸவம், திருப்பதி.

பின்னட்டை : ஸ்ரீபிரசன்ன வேங்கடேஸ்வரசுவாமி கோயில், அப்ளாயகுன்ட்டா (ஆ.பி.)

JAGADISH

# உங்களுடன்....

இருபத்தைந்து வயதான ஒருவர் நாளையிலிருந்து தனது இருபத்தாறுவது வயதில் அடியெடுத்து வைக்கின்றார் என்று கூறும்போது, அவர் வயது கூடுகின்றதே தவிர அவர்தம் வாழ்க்கைநாள் குறைகின்றது என்பதே உண்மை. ஒரு வயது கூடுவதால் அவர்தம் வயது எண்ணிக்கையில் ஒரு முன்னேற்றம் ஏற்படுகின்றது என்பதும், அவர்தம் அறிவில் ஒரு முன்னேற்றம் காணலாம் என்பதும் பெறப்படுகின்றது. வயதின் முன்னேற்றத்தைவிட அறிவின் முன்னேற்றமே உண்மையான முன்னேற்றமாகும். மேலும், அவரறிவு பிறருக்கு எந்த வகையில், எந்த அளவில் பயன்படுகிறது என்பதைப்பொறுத்தே அம்முன்னேற்றத்தின் பெருமை பேசப்பெறும். ஆனால் இதே ஒரு வருட முன்னேற்றத்தினை ஒரு நிறுவனமோ, அமைப்போ, துறையோ கொண்டு திகழ்ந்திடும் போது, அது அதனது முன்னேற்றத்திற்கு மட்டுமின்றி, பலரது, பலவற்றின் முன்னேற்றத்திற்கு வழிகோலும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அந்தக் கண்ணோட்டத்தில்தான் திருமலை திருப்பதி தேவஸ்தான மேலாண்மை 'ஸப்தகிரி'யின் வளர்ச்சியினைப் பார்க்க விரும்புகின்றது.

சுமார் ஐம்பதாண்டுகளுக்கு முன்னர் வடிவாலும், பக்க எண்ணிக்கையாலும் சிறிதாக விளங்கிய ஒரு சமயக் கையேடு, 25 ஆண்டுகளுக்கு முன் 'ஸப்தகிரி' எனும் பெயரினைத் தனக்கெனக் கொண்டு, தற்போது இவ்இதழ் மூலம் 'ஸப்தகிரி' தனது 26-ஆவது வயதில் அடியெடுத்து வைத்துள்ளது எனும் போது, அப்பத்திரிகையின் வளர்ச்சியில், மேலாண்மையைவிட வாசகர்களே, விற்பனைப் பிரதிநிதிகளே, கட்டுரை எழுத்தாளர்களே பெரிதும் பங்கு பெறுகின்றனர்.

வேத, உபநிடதக் கருத்துகளை விளக்க புராண, இதிஹாஸங்கள் தோன்றிட்ட போது, அவற்றின் விளக்கங்களை ஆஸ்திகர்கள் அறிந்து தெளியும் வகையில் ஆழ்வார்களும் அடியார்களும் தங்கள் பாக்களால் அழகுப்படுத்திட, அவற்றைச் சாமான்ய இந்துவானவன் படித்து மகிழ்ந்திடும் வகையில் சமயப் பத்திரிகைகள் பெரிதும் உதவின. அத்தகு சமயப் பத்திரிகை உலகில் தனக்கென ஒரு தனியிடத்தை 'ஸப்தகிரி' பெற்று வந்துள்ளது.

இறைவன் என்பவன் ஒரு மலைச் சிகரம் என்றால், அதன்கீழே, அதனைச் சுற்றியுள்ள அடர்ந்த காடாக இருப்பது சமய இலக்கியங்கள் எனலாம். அக்காட்டுப் பாதைகளை அவ்வப்போது சீர் செய்து பல தோப்புகளாக மெய்யடியார்கள் மாற்றியமைத்திட்டபோது, அத் தோப்புக்களை வண்ணமிகு நறுமலர்கள் மலர்ந்திடும் மலர்த்தோட்டங்களாக சமயப் பத்திரிகைகள் அழகுப்படுத்தி, அம்மலர்த் தோட்டப் பாதைகளின் மூலம் அவ் இறைவன் எனும் சிகரத்தினை அடைய வழிவகுத்தன என்றே கூறவேண்டும்.

ஒரு பேருந்து நிலையத்திற்கோ இரயில் நிலையத்திற்கோ செல்ல, சற்றே சுற்றிச் செல்லும்படியான அகலமான நெடுஞ்சாலை ஒன்று இருக்கலாம். இருப்பினும்

அந்த நிலையங்களுக்குச் செல்லும்படியாக பல கிளைச்சாலைகளும், குறுக்குப்பாதைகளும் அமைந்திருப்பதும், அவற்றை மக்கள் நாளும் பயன்படுத்தி வருவதும் நாம் நாளும் காணும் காட்சியாகும். எளிதாக, விரைவாக சென்று அடைய வேண்டும் என்ற மக்களின் மனநிலையின் எதிரொலியே அக்கிளைப்பாதைகள். காலத்தோடு போட்டிப்போட்டுக் கொண்டு செல்ல வேண்டிய நிலையில் இன்றைய மனிதன் இருந்திடும்போது, கண்டு களிப்பதன் மூலம் பிரச்சனைகளை மறந்துவிட நினைக்கும் நிலையில் மனிதன் வாழ்ந்திடும் போது, 'படித்தல்' என்பது அவனது வாழ்க்கையில் ஒரு அரிதான நிகழ்ச்சியாக இருந்துவிடுகின்றது. அகன்ற சாலைகளாக சமய இலக்கியங்கள் இருந்திடினும் அதைப்பயன்படுத்தாத நிலையில் - அதாவது அவற்றைப் படித்து இன்புறாத நிலையில் - குறுக்குப்பாதைகளாக சமயப் பத்திரிகைகள் விளங்குகின்றன. சமய ஈடுபாடு, தீவிர சமய இலக்கிய உறவு, சீரிய பக்தி மேம்பாடு எனும் வாகனங்களைக் கொண்டு அகன்ற சாலையில் சாதாரண இந்துவானவன் பயணிக்கும் வரையில், நடந்து செல்லக்கூடியனவாக பத்திரிகைகள் எனும் குறுக்குப்பாதைகள், கிளைச் சாலைகள் அவனுக்கு இன்றியமையாத சமயச் சாதனங்களாக விளங்குகின்றன. இரயில் தண்டவாளங்களைக் கடக்க உதவி புரிந்திடும் - ஆபத்தைத் தந்திடும் குறுக்குப்பாதைகளாக, சமுதாயத்தைத் தவறான பாதைக்கு அழைத்துச் செல்லும் வகையில் வியாபார நோக்கத்தோடு விளங்கிடும் பல பத்திரிகைகளின் நடுவே, இரயில் நிலையம் எனும் இறைவனை அடைந்திட இறை உண்மையை அறிந்திட கிளைச்சாலைகளாக, இந்து சமய ஒருமைப்பாட்டினைக் குலைத்திடா சமயப்பத்திரிகைகள் விளங்கிடும்போது, அவற்றை நாம் பயன்படுத்திக்கொள்ளாவிட்டால், நம்மைத் திருத்திக்கொள்ள நமக்கு நம் வாழ்க்கையில் கிடைத்திட்ட ஒரு நல்வாய்ப்பினை இழந்தவர்களாவோம். அந்த வகையில் 'ஸப்தகிரி' வாசகர்கள் தங்கள் வாய்ப்பினை நன்றாகவே பயன்படுத்தி வருகின்றனர் என்பதை 'ஸப்தகிரி' ஒரு சில மாதங்களாக காலம் கடந்து வெளிவரினும், தொடர்ந்து அவர்கள் சந்தாதாரர்களாக விளங்குவதாலும், அவர்கள் அறிமுகத்தால் நாளும் புதிய சந்தாதாரர்கள் பெருகிவருவது மூலமும் அறியமுடிகின்றது. தேவஸ்தான அச்சுக்கூடத்தில் எதிர்பாராத சில தொழில்நுட்ப தோய்வுகளின் காரணமாக இக்காலதாமதம் ஏற்பட்டுள்ளது. இன்னும் இரண்டு மூன்று மாதங்களில் இந்நிலை சீர்பட்டு, பத்திரிகை தொடர்ந்து காலக்கிரமத்தில் வெளிவரும் என்றே உறுதி கூறுகின்றோம்.

இந்திய சனாதன தர்மத்தின் பெருமையினையும், இந்தியத் தத்துவங்களின் அருமையினையும், சமய இலக்கியத்தின் சிறப்பினையும், இந்திய கலாச்சாரத்தின் மேன்மையினையும் வாழ்க்கையின் எல்லாநிலையினரும் எளிதாக, விளக்கமாக, விரைவாக அறிந்துகொள்ள வேண்டும் என்றே தி.தி. தேவஸ்தானத்தாரால் மலிவு விலையில் வெளியிடப்படும் 'ஸப்தகிரி'க்குத் தொடர்ந்து தங்கள் மேலான ஒத்துழைப்பினையும், உற்சாகத்தினையும் நல்க வேண்டும் என்று, இவ் இதழ் மூலம் தனது இருபத்தாறுவது வயதினைக் கொண்டாடிடும் 'ஸப்தகிரி'யானது தன் வாசகர்களை, விற்பனைப் பிரதிநிதிகளை, எழுத்தாளர் பெருமக்களைக் கேட்டுக் கொள்கின்றது.



# பொன்னின் சோதி!

திரு. ஆர்.பி. சாரதி - குரோம்பேட்டை

சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லும் இராமாயணத்தில் கவிச்சக்கரவர்த்தி கம்பன் காவிய நாயகியை அறிமுகம் செய்யும் நயம் எண்ணி எண்ணி இன்புறவேண்டிய ஒன்று. அறிமுகத் தொடரின் ஆழம். அற்புதமான பொருட்செறிவு - நம்மை அதிசயிக்க வைக்கிறது. அந்த அறிமுகத்தொடர் நம் காதுகளில் ஒலித்துக்கொண்டே இருக்கும் வகையில் கம்பனின் காவிய ஓட்டமும் தொடர்கிறது.

கன்னி மாடத்தில் சீதை தோன்றும் காட்சி கவிதையிலே சொல்லோவியமாகக் கம்பனால் தீட்டப்பெறுகிறது; தொடர்கிறது.

**பொன்னின் சோதி போதின் இன்**
**நாற்றம் பொலிவே போல்**
**தென் ஊன் தேனின் தீஞ்சுவை**
**செஞ்சொல் கவியின்பம்**
**கன்னிம்மாடத்தும்பரின் மாடே**
**கழி பேடோடு**
**அன்னம் ஆடும் மூன்றுறை**
**கண்டங்கயல் நின்ருர்**
(மிதிலை 23)

சீதா தேவியைப் "பொன்னின் சோதி"யாகக் காட்டுவது வெறும் விழியழகுக் காட்சியா? பொன் ஒளிக்கு உயிர் உண்டா? உணர்வுண்டா? ஒழுங்கான உருவம்தான் உண்டா? புற அழகைப்படம் பிடிக்கப்போட்ட சொற்கள் அவை அல்ல. அறிமுகத்தில் கவிஞன் எடுத்தாண்ட பொன்னும், பெருஞ்சுடர்த்தீயும் காவிய நோக்கம் நிறைவேறும் வரை அவர் நெஞ்சைவிட்டு அகலவே இல்லை.




பொன் மண்ணில் தோன்றுவது. பொன் மகள் சீதையும் மனிதக்கருவில் உதித்தவள் அல்லள். மண்ணின் கருவிலே மலர்ந்தவள். இதைக் காவிய முடிவில் தசரதன் விண்ணிலிருந்து மண்ணுக்கு வந்து சீதையிடமே நினைவூட்டுகிருன், அக்கினிப்பிரவேசத்துக்குப் பிறகு!

"மண் பிறந்தகம் உனக்கு நீ
வானின்றும் வந்தாய்"

சிவனும் மண்ணையே பொன்னாகக் காட்டி சீதையை

"தொல்லை எவ்வுலகும் பிறக்கும்
பொன் வயிற்று அன்னை

என்கிருர்.

மண்ணிலே தோன்றிய பொன் அப்படியே அணிக

லன் ஆவதில்லை. பொன்னின் ஜொலிப்பும் மண்ணில் புல னாவதில்லை. தீயிலிடத்தான் வேண்டியிருக்கிறது. தீயிலிட் டப் பொன் சுடச்சுட ஒளிரும். இதையும் தசரதனே சொல்லு கிறான்:

"பொன்னைத் தீயிடைப் பெய்தல்
அப்பொன்னுடல் தூய்மை
தன்னைக் காட்டுதற்கு என்பது
மனக்கொளல் தகுதி
உன்னைக் காட்டினன் கற்பினுக்கரசி
என்று உலகில்
பின்னைக் காட்டுவது அரியது என்று
எண்ணி இப்பெரியோன்"

பொன்னின் சோதி என்ற இரு சொல் தொடரில் சீதை மண் ணிடைப் பிறந்தமையையும் தீயிடைப் புகுந்தெழுந்து கற் பின் சோதியாக உயர்ந்ததை யும் குறிக்கவில்லையா? சீதா யணமே இந்த இரு சொல் லிடையில் பிறந்து மலர்ந்து உயர்ந்து விடுகிறதல்லவா?

காவியத்தின் முக்கியமான இடங்களில் எல்லாம் பொன் னும் தீயும் சுடர்விடுவது கவிஞ னின் நினைவாற்றலைக்காட்டி நம் நெஞ்சையும் அள்ளுகி றது. கம்பன் கன்னிமாடத் துக் கண்ட சீதையைத்தான் கல் யாண மேடைக்கும் அழைத்து வருகிறான்.

'பொன்னின் ஒளி பூவின் வெறி சாந்து பொதி சீதம்' என்றே பாடுகிறான். இராமன் கரம் பிடித்த சீதை காகுத்த னோடு செல்லுகிறாள்.

அதையும் கம்பர் "பொற்கொடி கைக்கொடு நன்மனை புக்கார்" என்று பாடும்போது சீதையைப் பொன்தொடி என்றே குறிக்கி றார். கரம்பிடிப்பதால் பொன் வளை என்கிறார்.

மாமியார் மெச்சிய மருமகள் ஆகிறாள் மைதிலி. மகனுக்கு ஏற்ற மருமகள் என்ற மகிழ்ச்சி யைக் கூறுவது எப்படி?

"நன் மகனுக்கு இவள் நல் அணி" என்றார்.

இராமன் சூடிய பொருத்த மான பொன் அணியாம் புகழ்ச் சீதை.

அணிகலன் என்றால் திருடப் படுவதும், தேடரு மாமணியா வதும் இயற்கைதானே?

கடிமணக்காட்சியில் பொன் னாய்க் காட்டிய சீதையைக் காட்டுக்கு ஏகும் காலத்தில் மண் ணகக் காட்டிவிடவில்லை. அங் கேயும்,

'தன்னது ஆருயிர்த்தம்பியும்
தாமரைப்
பொன்னும் தானும் ஓர் தேர்மிசைப்
போயினான்'

என்றே பாடுகிறார்.

இதையே இன்னொரு இடத் தில்,

'தம்பியும், மிதிலைப் பொன்னும்
போயினள்'

என்றார்.

கம்பரின் அறிமுகப் பொற்சு டர் கலங்கரை விளக்காய் காவி யம் முழுதும் படர்வது பெரு மகிழ்வுக்குரியது.

கனனிமாடம், மணமேடை, கணவன் வீடு, அயோத்தி நீங் கத் தேர் ஆகியவற்றில் மட் டுமல்ல, காட்டில் இறையோன் அமைத்த பர்ண சாலையிலும், ஏன் பஞ்சவடிப் பர்ணசாலை யிலும், பொன்னாகவே காட்சி தருகிறாள்.

இன்னணம் இளையவன்
இழைத்த சாலையில்
பொன்னிறத்திரு வொடு
குடிபுக்கான் அரோ!

"பொன்னொடும் புனிதன் போய் அப்
பூம்பொழில் சாலை புக்கான்"

சூர்ப்பனகை இராவணனிடம் சீதையை அறிமுகம் செய்யும் போது பொன்னை மறக்க வில்லை. பெண்ணாயிற்றே!

"கொங்கைச் செம்பொன்......"

தொடர்கிறது இப்படி.........

சூர்ப்பனகை ஊட்டிய பொன் மோகம் இராவணனையும் பிடித் துக்கொள்ளுகிறது. பொன்மா னைப் பொன்னிடம் அனுப்பும் விதம் பார்ப்போமா?

பொன்னின் மான் ஆகிப் புக்குப்
பொன்னை மால் புணர்த்துக.

பெண்ணுக்குப் பொன்னாசை இயல்பு. பொன்னுக்குப் பொன் மான் மீது மயக்கமே வர வேண்டுமாம்.

பொன்மான் மயக்கம் பொற் பாவைக்குத் தீர்ந்தது. பொற் பாவை மயக்கம் இராவண னுக்கு எப்போது தீர்ந்தது?

உறவு நட்புச் சுற்றமெல்லாமி ழந்தபோது இராவணன் சீதை யைக் கொன்றுவிடத்துடித்தெ ழுகிறான்.

இத்துயர் நமர்கட்கெல்லாம்
பொன்தழைத்தனய.......
சீதைபால் புகுந்ததென்ன.......வாளால்
கொன்றிழைத்திடுவேன் என்னா
ஓடினான் அரக்கர் கோமான்

இராவணனுக்கு காமத்தால் காஞ்சனமாகத் தெரிந்த சீதை வீடணனுக்குப் பக்தி யால் தெய்வமாகத் தெரிந்தது. சீதையை அழைத்துவர அசோக வனம் சென்ற வீடணன்,

'ஓடி அப் பொன்னின் கால் தளிர்
சூடிப் போற்றினான்'

"பொன்னை"ப் போலவே, "சோதி"யும், பொற்சுடராகவும், பொன்னைவிட ஒளிரும் பெருஞ்சுடர்த்தீயாகவும், சீதை காவியத்தில் பல இடங்களில் காட்சி தருகிறாள்.

சீதையே ஒரு பெருந்தீ. இல்லாவிட்டால் அவள் காட்டுத் தீக்கு அஞ்சாமல் "நின்பிரிவினும் சுடுமோ பெருங்காடு?" என்று கேட்பாளா? அவள் கற்புக்கனல். அதை சூர்ப்பனகை விழி மூலம் விரிக்கிறார் கம்பர்.

.........மீன்சுடர் விண்ணும் மண்ணும்
விரிந்த போர் அரக்கன் என்றும்
கான்சுட முளைத்த கற்பின்
கனலியைக் கண்ணில் கண்டாள்

கற்பின் கனல் மட்டுமா தேவி சீதை? அவள் யாகத்தீ. அத்தீயில் விழும் விட்டிலாக சந்நியாசி வேடத்தில் வந்துவிட்டார் இராவணன். ஓமத்தீயில் இடும் அவிசை நாய் வேட்பதா? சீதை சினந்து கேட்கிறாள் அவனை.

பொங்கெரி புனிதர் ஈயும்
அவியை நாய் வேட்டதென்ன?

ஆதரவற்று, அனாதையாக, அசோக வனத்திலே சிறைப்பட்டிருந்தபோதும் தான் ஒரு நெருப்பு என்ற எண்ணம் மட்டும் சீதைக்கு மறக்கவே இல்லை. இராவணனை அழிக்க இராமருக்காவது படை தேவைப்பட்டது கதைப்படி. ஆனால் சிதைக்கு....? அவள் உருவத்தின் முழுத்தீ கூட அல்ல நாக்கு நுனியில் உமிழும் சொல் தீ... சாபத்தீ போதுமாம் இராவணனை மட்டுமல்ல... அவன் வென்ற உலகங்களையும் அவனையும் சேர்த்துச்சுட்டுவிடுவாளாம். அநுமனிடம் சொன்னதுதான்.

எல்லை நீத்த உலகங்கள்
யாவும் என்
சொல்லினால் சுடுவேன்.

அசோக வனத்துச் சீதை ஆற்றலை அடக்கி நீறுபூத்த நெருப்பாக இருந்தமையால் தான் 'ஓவியம் புகையுண்டதே ஒக்கின்ற உருவமாக'க் காட்சியளித்தாள். 'ஆதரித்து அமுதில் கோல் தோய்த்து அவயவம் அமைக்கும் தன்மை யாதெனத் திகைத்துத் திகைத்து அரங்கவேள் செய்த ஓவியம் புகையுண்டவாறு' இருந்தாலும் புகை நடுவினில் தீ அணைந்து விடவில்லை. புகை மூடியதால் அநுமனைக் கண்டபிறகு "நெய்யுறு விளக்காகி" விடுகிறது.

எனவே வாலில் வைத்த தீயுடன் பாய்ந்த அநுமனைத் தீ சுடக்கூடாதென வேண்ட முடிகிறது. கற்புத்தீ, கனலுக்கு வேண்டுகோள் விடுக்கிறது.

'நீயே உலகுக்கு ஒரு சான்று
நிற்கே தெரியும் கற்பதனில்
தூயோன் என்னில், தொழுகின்றேன்
எரியே அவனைச் சுடல்' என்றாள்

கண்ணீர்க் கடலில் மிதந்த கனலைக் கண்டு கொண்ட அரக்கர்களில் இருவர் கும்பகர்ணனும், வீடணனும்.

இராவணன் மந்திரப்படலத்தில் கும்பகர்ணன் கூறுகிறான்:

ஆயிரம் மறைப்பொருள் உணர்ந்து
அறிவு அமைந்தாய்
தீவினை நயப்புறுதல் செய்தனை

தீயைச் சேரத்துடிக்கும் விட்டில் இராவணன் என்பதை நினைவூட்டுபவன் கும்பகர்ணன்.

வீடணன் அறிவுரையில் வேதவதி கதையைநினைவூட்டுகிறான். இராவணனுக்கு அஞ்சித் தீயில் விழுந்த வேதவதியே சீதையாகி வந்தவள் என்பதை உணர்த்துகிறான்.

'தீயிடைக் குளித்த
அத்தெய்வக் கற்பினாள்
வாயிடை மொழிந்த சொல்
மறுக்க வல்லமோ?
நோய் உனக்கு யான் என
நுவன்றுளாளவள்
'ஆயவள் சீதை' பண்டு
அமுதில் தோன்றினாள்

தீயினை எரிக்கவோ, சுடாதிருக்கவோ ஆணையிடும் ஆற்றல்பெற்ற கற்புக்கனல் அவள்.

எனவேதான் அக்னிப்பிரவேசத்திற்குத் தானே தயாராகி இளையவனை 'இடுதி, தீ' என்கிறாள். தீ அவளைச் சுடவில்லை. அவள் தீ, தீயைச் சுடுகிறது.

அக்கினி தேவனே சொல்லுகிறான்:

அங்கியான் என்னை இவ்வன்னை
கற்பு எனும்
பொங்கு வெந்தீச் சுடப்
பொறுக்கிலாமையால்
இங்கு அணைந்தேன்

இவ்வாறு மண்ணில் உதித்த பொன் தீயிலிடப்பட்டு, கற்புக் கனலாக ஓங்கி உயர்ந்த வேள்வித்தீயானதை, "பொன்னின் சோதி" என்ற அறிமுகத் தொடரே அழகாக விரிக்கிறது.



மதிப்புரை

# ஆழ்வார் பாசுரங்கள் - 108

(ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற (பாடல்பெற்ற) வடநாட்டு திவ்ய தேசங்கள் (11)

தொகுத்தவர்: பா. வெங்கடாசாரி; 1994; பதிப்பகத்தார்: ஸ்ரீசேவாபாரதி; நூல்கிடைக்குமிடம்: 64, காந்தி ரோடு, சூளைமேடு, மதராஸ்-600 094; பக்கங்கள்: i + viii + 32; விலை: ரூ. 9-00

இந்தியப் பண்பாட்டின், ஆன்மீகவாழ்வின் ஒளிவீசும் ஓர் எழில்முகம் பக்தி; எளிமையானது, எல்லோரும் பின்பற்றத் தக்கது. திருமால் நெறியினில் திளைத்துத் தமது இனிய அநுபவங்களை அமுதப்பனுவல் களாக்கியவர்களுள் ஆழ்வார்களுக்கு ஒரு சிறப்பிடம் உண்டு என்பது பற்றி இருவேறு கருத்துக்கள் இருக்கமுடியா. இவ்வாழ்வார்களினால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற திவ்விய தேசங்கள் நூற்றியெட்டு. அவற்றுள் வடநாட்டுத் திருப்பதிகளில் உறையும் அர்ச்சை மூர்த்திகளைப் பற்றிய ஆழ்வார் பாசுரங்களின் ஒரு சிறு தொகுப்பே இந்நூல்.

நூலின் உட் தலைப்பு "ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற (பாடல்பெற்ற) வடநாட்டு திவ்ய தேசங்கள் (11)" என அமைந்துள்ளது. எனினும், பொருளடக்கத்தில் 12 என்று ஒரு கணக்கு காணப்படுகின்றது. "வடநாட்டுத் திருப்பதிகள் 10, 11, 12, 13, 14 எனப் பல்வகைக் கருத்துக்கள் உள்ளன. ஆயினும், வங்கிபுரத் தாய்ச்சி (நாலாயிரப் பாசுரப்படி 108 திருப்பதிக் கோவை)யின் படி வடநாட்டுத் திருப்பதிகள் 11 எனக் கொள்ளப்பட்டுள்ளது" என்னும் குறிப்பு (நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், சென்னை, திருவேங்கடத்தான் திருமன்றப் பதிப்பு, 1981) இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

திருக்கண்டம் கடிநகர் (தேவப்ரயாக்) முதலாக திருவேங்கடம் வரை உள்ள திருப்பதிகளில் பாடப்பெற்ற 108 பாசுரங்கள் இந்நூலில் இடம்பெறுகின்றன. அவை முறையே பெரியாழ்வார் பாசுரங்கள் 23 (திருக்கண்டம் கடிநகர் 11, திருஅயோத்தி 1, திருவடமதுரை, கோவர்த்தனம் 8, திருஆயர்பாடி-கோகுலம் 2, திருத்துவராபதி - துவாரகை 1, திருமங்கை ஆழ்வார் பாசுரங்கள் 52 (திருப்பிரிதி ஜோஷிமட்-10, திருவதரி 10, திருவதரி ஆசிரமம் 10, திருச்சாளக் கிராமம் 10, நைமிசாரண்யம் 10 சிங்கவேள்குன்றம்-அகோபிலம்2) குலசேகராழ்வார் பாசுரங்கள் 5 (திருஅயோத்தி 5), தொண்டரடிப் பொடிஆழ்வார் பாசுரங்கள் 2 (திருஅயோத்தி 1, திருவடமதுரை 1), நம்மாழ்வார் பாசுரங்கள் 21) திருஅயோத்தி 1, திருவடமதுரை 8, திருத்துவராபதி 1, திருவேங்கடம் 11), ஆண்டாள்பாசுரங்கள் 4, (திருவடமதுரை 1, திருத்துவராபதி 1, திருஆயர்பாடி 2), திருமழிசை ஆழ்வார் 1, (திருத்துவராபதி 1) என்பனவாம்.

இவற்றுள் திருமங்கை ஆழ்வாரின் பாசுரங்களே மிகுதியாக இருப்பது சிந்திக்கத்தக்கது; ஆய்விற்கும் உரியது.

"தமிழ்நாட்டிலிருந்து வடநாட்டு திவ்ய தேச புனிததேசயாத்திரையில் செல்லும் சமயம் அந்தந்த திவ்ய தேசத்தில் பெருமானைச் சேவிக்கும் சமயம், மேற்படி பெருமாள் சம்பந்தமான பாசுரங்களைச் சேவித்து, அனுஸந்தானம் செய்து ஆண்டவனின் அருள் ஆசியைப்பெற இந்தத் தொகுப்பு துணைபுரியும்" என்னும் தொகுப்பாசிரியர் நம்பிக்கை முழுதும் ஏற்புடையதே ஆகும்.

நூலின் துவக்கத்தில் கொடுத்துள்ள "பொதுத்தனியன்கள்" VII-ஆம் பக்கத்தில் காணப்படும் திவ்ய தேசங்கள் மற்றும் அங்கு சேவை சாதிக்கும் பெருமாள், தாயார் ஆகியோரின் திருநாமங்கள் பற்றிய விவரங்கள் நிரம்பவும் பயனுள்ளவை. ஸ்ரீரங்கம் ஸ்ரீமதாண்டவன் சுவாமிகள் அருளிய "ஸ்ரீமுகம்" மற்றும் அகோபிலம் ஸ்ரீமதழகிய சிங்கர் சுவாமிகள் இந்தியில் அனுக்கிரகித்த "ஸ்ரீமுகம்" இரண்டும் நூலுக்கு அணி செய்கின்றன.

புனித யாத்திரைக்கும் அதுபோது தினசரி பாராயணத்திற்கும் பயன்படும் வகையில் அமைந்துள்ள இந்நூல் நன்கு அச்சிடப்பட்டுள்ளது.

வடநாட்டிலிருந்து தென்னாட்டுத் திருப்பதிகளுக்கு, சிறப்பாக, ஸ்ரீரங்கம், திருப்பதி போன்ற திவ்விய தேசங்களுக்கு யாத்திரை செய்யும் வடநாட்டுப் பக்தர்களுக்கு உதவிடும் வகையில் இந்தியில் செய்யுள் நடையிலேயே மொழிபெயர்க்கப்பெற்றுள்ள ஆழ்வார் பாசுரங்களையும் இம்முறையில் அச்சிட்டு வெளியிடுவது பற்றியும் தொகுப்பாசிரியர் சிந்திக்க வேண்டும்.

அ. நடராஜன்.
திருப்பதி.

# அன்னமய்யாவும் நம்மாழ்வாரும்

திரு. பா. அ. முனுசாமி - திருப்பதி

பாரத தேசம் பல சமயக் கொள்கைகள் தோன்றி வளர்ந்த தாயகம் ஆகும். வேதங்களும், உலகமெல்லாம் அன்றும் இன்றும் ஒப்புக்கொள்ளுமாறு பரஞானம் வழங்கிய உபநிடதங்களும் இந்த மண்ணில் தோன்றி மலர்ந்து தெய்வ மணம் கமழ்வனவே! மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம், விண்ணக வாழ்விற்கும் அது தடை இல்லை என்றும், இச் சுவை தவிர யான் போய் இந்திரலோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன் என்றும், 'மனித்த பிறவியும் வேண்டுவனே இந்த மானிலத்தே' என்றும் மண்ணுலக வாழ்வை வற்புறுத்தி விண்ணக வாழ்விற்கு வழிகோலிய பக்தி இயக்கப்பெருவெள்ளம் பெருக்கெடுத்துப் பாரெல்லாம் தெய்வப் பயிர் வளர்ந்ததும் இம்மண்ணில்தான்.

இத்தகு பக்தி இயக்கம் தமிழ் மண்ணில் முதன்முதல் தோன்றி ஆற்றலோடு வளர்ந்தது. தேவாரம் , திவ்யவியப் பிரபந்தம் முதலான பக்தி இயக்கப்பாடல்கள் தோன்றியன இந்தத் தமிழ் மண்ணிலேயே. வேதம், வேதாந்தம், பிரம்ம சூத்திரம், பகவத் கீதை, சமண, பௌத்த சமயங்களெல்லாம் எந்த நாட்டுக்கும் பொதுவாயினும் வைணவமும், சைவமும் சிறப்பா தமிழ்நாட்டிற்கே உரிய சமயங்களாகக் கருதப்படுகின்றன.

வைணவத் தத்துவக் கோட்பாட்டுக்கு அடிப்படை வகுத்



துத்தந்த விசிஷ்டாத்வைத சிந்தனைகளைத் தந்தவர் இராமாநுசர் ஆவார். அப்படி அவர் சங்கரரின் அத்வைதத்தை மறுத்து விசிஷ்டாத்வைதத்தை நிலைநிறுத்த அவருக்கு வழிகாட்டிய நூல் திவ்யபிரபந்தமே ஆகும்.

தமிழில் வைணவச் சமயப் பாடல்கள் சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகிய பரிபாடலில் சிறப்பாக அமைந்திருக்கக்காணலாம். திவ்ய பிரபந்தத்திற்கு பின்னும் எண்ணற்ற வைணவ சமய நூல்கள் தோன்றின என்றாலும் ஆழ்வாரின் அருளிச்செயல்கள் அடங்கிய நாலாயிர திவ்ய பிரபந்தத்திற்கு அவையெல்லாம் ஈடாகாது.

ஆழ்வார்களின் அருளிச்செயல்களாகிய நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் சிறப்பாக பகவத் விசயம் என்று பாகவதர்களால் போற்றப்பெறும் திருவாய் மொழியினை அருளிச் செய்த நம்மாழ்வார் பாசுரங்களிடத்தும் தாள்ளப்பாக்க அன்னமய்யாவுக்கு ஈடுபாடு பெரிதும் இருந்திருத்தல் வேண்டும் என்பது இருவர்தம் பாடல்களையும் ஒப்பிட்டுக் காண்போர் உணர்வர்.

திருமால் திருவருளால் மயர்வற மதிநலம் அருளப் பெற்றவர்கள் ஆழ்வார் பெருமக்கள். எம்பெருமான் திருக்குணங்களில் ஆழங்கால் பட்டமையால் இவர்கள் 'ஆழ்வார்கள்' என்ற பெயர் பெற்றனர். ஆழ்வார்கள் பன்னிருவர். இவர்களுள் ஒருவர் நம்மாழ்வார். நம்மாழ்வாருக்கு பெற்றோர் இட்ட பெயர் 'சடகோபன்'. சடகோபன் ஏனைய ஆழ்வார்களிலும் சிறப்புற்று நம்மவர் என்று போற்றத்தக்க பெருமை வாய்ந்து 'நம்மாழ்வார்' என்ற திருநாமத்தால் வழங்கப்பெற்றார். ஆழ்வார்களின் தலைவராகவும் கருதப்பெறுகின்றார்.

தாள்ளபாக்க அன்னமய்யா தெலுங்கு பக்தி இலக்கிய பரம்பரையில் மூலவராக விளங்குகிறார். இவரது காலம் கி.பி. 1424-1503 வரையாகும். தாள்ளப்பாக்க அன்னமய்யா, திருவேங்கடவன் மீது முப்பத்து ஈராயிரம் (32,000) இன்னிசைப்பாடல்களைப் (கீர்த்தனைகள்) பாடியுள்ளார். தாள்ளப்பாக்க அன்னமய்யாவை அன்னமய்யா, அன்ன

மய்யங்கார், அன்னமய்யாசார்யர், அன்னய்ய குரு, அன்னய்யார்யா, கோனேடி அன்னமய்யா என்று பல பெயர்களிட்டு அழைப்பர்.

'வேதம் தமிழ்செய்த வித்தகன்' என்று போற்றுமாறு வேத, வேதாந்த உண்மைகளையெல்லாம் நம்மாழ்வார் தமிழில் தந்ததுபோல், தாள்ளபாக்க அன்னமய்யாவும் வடமொழியில் வாழ்ந்து வந்த வேதாந்த நுண்பொருளையெல்லாம் பாமரனுக்கும் விளங்குகின்ற வழக்குத் தெலுங்கில் பாடியுள்ளார். ஆசாரியராகவும், ஆழ்வாராகவும் வைணவ சமயத்தை வளர்த்த முதல்வரான நம்மாழ்வார் விஷ்ணுவின் கௌஸ்துவ அம்சமாகப் பிறந்த பெரியார். அப்படியே அன்னமய்யாவும் திருமால் கைக்கொண்ட வாளின் அம்சமாக அவதரித்தார். இந்த இருபெரு வைணவப்பெரியோர்களும் வைகாசித்திங்களில் விசாக நாளில் பிறந்ததும் நம் சிந்தனைக்குரியது. இப்படியே இருவரும் பதினாறு வயதில் தெய்வத்திருக்காட்சி பெற்று திவ்வியத் திருப்பாடல்கள் பாடத்துவங்கினார்கள் என்பதும் நோக்கத்தக்கது. நூற்றுஎட்டு திருப்பதிகளுள் பல திருக்கோவில்களைப் பாடித் திருவேங்கடத்தைப் பல பாடல்களால் சிறப்பித்த நம்மாழ்வார் போலவே அன்னமய்யாவும் திருமால் குடிகொண்டு திகழும் திருத்தலங்கள் பலவற்றைப்பாடித் திருவேங்கடத்தைச் சிறப்பாகத் தம் பல்லாயிரம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

நம்மாழ்வார் நெஞ்சையும், வண்டையும், கிளியையும் விளித்துப்பாடுவது போல் அன்னமய்யாவும் அவற்றை வருணித்துப் பாடுகின்ற கீர்த்தனைகள் பல உள்ளன.

அன்னமய்யா திவ்ய பிரபந்தத்தின் பாற்கொண்ட ஈடுபாடு பின்வரும் கீர்த்தனைகளில் விளங்கக்காணலாம். திருவாய்மொழி மூன்றும்பத்தில் 'ஒழிவில் காலமெல்லாம்' என்று தொடங்கும் மூன்றும் பதிகம் திருவேங்கடத்தானையும், திருமலையையும் பற்றிய பத்துப் பக்திப் பாடல்களைக் கொண்டு விளங்குவதாகும். 'எங்கள் தந்தை தந்தைக்கெல்லாம் முன்னோனாய் சோதித்திருவுருவாய் ஓம் எனும் பிரணவத்தை ஓதும் அருவி சூழ் திருவேங்கடமுடையானுக்கு ஒழிவில் காலமெல்லாம் அடிமை செய்ய வேண்டும். அத்திருவேங்கடநாதன் வானவர்களும், தேவேந்திரனும் தொழுது வணங்கத்தக்கவாறு எல்லையற்ற புகழோடு மேக வண்ணனாய் அத்திருமலையில் நின்று உள்ளான். தெள்ளிய சுனை பல சூழும் திருவேங்கடத்து வானவர் தலைவனாய் அளவிலாப் புகழொடு திகழும் திருவேங்கடவனே அன்று மாயோனாய்த் தோன்றியவன். செந்தாமரைக் கண்ணன் செவ்விய இதழோடு விளங்கும் கருமாணிக்கக்கட்டி, தேவர்களுக்கு எல்லாம் தலைவன் என்று திருவேங்கடத்தானைப் புகழ்வதில் அவனுக்கு என்ன பெருமை. நீசனாகிய என்பால் கூட பாசம் வைத்த அப்பரஞ்சோதியின் எளிவந்த தன்மை அல்லவோ உண்மையில் அவனுக்குப் பெருமை தருவதாகும்' என்று திருவேங்கடத்தானையும் திருமலையையும் ஆழ்வார் இப்பதிகத்தில் பாடிப் பரவியது போலவே அன்னமய்யாவும் பாடியருளிய பாக்களை அவரது பாடல்களில் காணலாம்.

'அதிகோ அல்லதிகோ ஹரிவாசமு,
பதிவேல சேஷுலபடகலமயமு
அதெ வேங்கடாசல மகிலோந்நதமு,
அதிவோ ப்ரஹ்மாதுல கபுரூபமு'

என்று வேங்கடத்தானின் மலைத் தோற்றத்தையும் சிறப்பையும் கீர்த்தனை ஒன்றில் பாடுவதைக் காணலாம்.

'நாராயணனளித்த இந்த நாவினைக் கொண்டு நாராயணனை மட்டுமே பாடுவேன்' என்ற கருத்து அமைந்த பல பாடல்கள் அன்னமய்யா கீர்த்தனைகளில் காணப்படுகின்றன. இந்த கருத்தினை 'சொன்னால் விரோதமிது' என்ற திருவாய்மொழிப் பதிகத்தோடு ஒப்பிட்டு மகிழத்தக்கது. அன்னமய்யாவுக்குச் சொந்த அனுபவத்தில் சாலுவ நரசிம்மராயரைப்பாட மறுத்து எழுந்த இந்த உணர்வு நம்மாழ்வார்பால் இயல்பாக உலக உயிர்கள் உய்யும் பொருட்டு எழுந்தது என்பது இங்கு நோக்கத்தக்கது. அதில் உள்ள ஆழ்வார் பாடல் ஒன்று இங்குக் குறிக்கத்தக்கது.

வாய்கொண்டு மானிடம் பாடவந்த
கவியேனல்லேன்
ஆய்கொண்ட சீர்வள்ளல் ஆழிப்-
பிரானெனக்கேயுளன்
'சாய்கொண்ட இம்மையும் சாதித்து
வானவர் நாட்டையும்
நீ கண்டுகொள்' என்று வீடும்
தரும் நின்று நின்றே

இழிந்த சாதியினராயினும் திருமாலுக்கு அவர் அடியவராயின் அவரே சிறந்தவராவார் என்ற கருத்து 'கொஞ்செமுனு கனமுனு கொனநேலா' என்ற பாடலில் அன்னமய்யா கூறு

கின்றார். இப்பாடல் பின்வரும் நம்மாழ்வார் பாடலோடு ஒருங்க வைத்து உணரத்தக்கது.

"குலந்தாங்கும் சாதிகள் நாலிலும்
கீழிழிந்து எத்தனை
நலந்தானிலாத சண்டாள
சண்டாளர்களாகிலும்
வலந்தாங்கு சக்கரத்தண்ணல்
மணிவண்ணற்காளரென்றுள்
கலந்தார் அடியார் தம்மடியாரெம்
அடிகளே!

அன்னமய்யாவின் பாடல் ஒன்றில் (8-23) 'வெங்கடேசா, உன் அடியவர் அடியவர்க்கு யான் அடியேன்' என்ற தாசனாம் தன்மை பின்வரும் நம்மாழ்வார் பாடலில் அமையக் கண்டு மகிழலாம்.

அடியார்ந்த வையமுண்டாலிலை
யன்னவசஞ்செய்யும்
படியாது மில் குழவிப்படி யெந்தை
பிரான் தனக்கு
அடியார் அடியார் தம் அடியார்
அடியார் தமக்
அடியார் அடியார் தம் அடி
யாரடி யோங்களே

இறைவனுக்கு அடிமை பூண்ட உயிரும், அவனளித்த இந்த உடலும் அவனுக்கே உடமையும், உரிமையும் ஆவன. இவற்றால் அவனை வணங்க வேண்டும். அவனோடு தொடர்பில்லாத செயலும், அவன் நினைவில்லா வாழ்வும் பாழ் என்று 'அன்னமய்யா' கூறும் உண்மை 'ஏறூரும் இறையோனும்' என்னும் திருவாய்மொழி பதிகத்தோடு ஒத்திருக்கக் காணலாம்.

நம்மாழ்வார் பாடல் பலவற்றிலும் அமைந்துள்ள உணர்வும் கருத்தும இங்ஙனம் அன்னமய்யா கீரத்தனைகளிலும் அமைந்து விளங்குதல் ஒரு சிறிது காட்டப்பெற்றது.

இவ்வாறு நம்மாழ்வாருக்கும், அன்னமய்யாவுக்கும் பிறப்பிலும், பெருமான் அருள்பெற்ற நிலையிலும், பாசுரம் பல வகையிலும் ஒற்றுமை இருப்பது போலவே அவ்விருவர் தம் பக்திப்பாடல்கள் பலவற்றின் இடையேயும் உணர்வும், கருத்தும் ஒத்திருக்கக் காணலாம். ★

## சண்டேசுவரர் வணக்கம்

சிவாலயங்களில் பஞ்சமூர்த்திகள் புறப்பாடு அல்லது திரு வீதி உலா நிகழும் போது, அவர்களுள் ஒருவராக விளங்குபவர் சண்டேசர் என்பது யாவரும் அறிந்ததொன்று. சண்டேசர், சண்டீசர், சண்டேசுவர், சண்டிகேசர், சண்டேசுவர நாயனார் எனப்பல வகைகளில் இவருக்குப் பெயர் வழங்கும்.

எல்லாச் சிவாலயங்களிலும் இவருக்குத் தனியே ஒரு சிறு சந்நிதி உண்டு. அது கருவறைக்குப் புறம்பே. அபிடேகத் தீர்த்தம் விழும் கோமுகியை அடுத்து அருகில் அமைக்கப்பட்டிருக்கும். கோயில்களுக்குச் சென்று நாம் செய்யும் சிவதரிசனமும் வழிபாடும் அவற்றின் இறுதியில் நாம் செய்தற்குரிய சண்டேசுவரர் தரிசனத்துடனும் பிரார்த்தனையுடனுமே நிறைவு பெறுகின்றன. சண்டேசுவரரைத் தரிசனம் செய்து முடிக்காதபோது, சிவதரிசனம் நிறைபெறுமையோடு, அதன் பயனும் நமக்குச் சித்திப்பதில்லை என்பது பெரியோர் துணிபு.

திருக்கோயிலுக்குச் சென்று சிவபிரானை வழிபடும் அன்பர்கள் கோயிலை முறையே வலம் வந்து, ஒவ்வொரு மூர்த்தியையும் வணங்கி முடித்துக் கொண்ட பிறகு சண்டிகேசுவர் கோயிலை அடைதல் வேண்டும். கோயில் வழிபாட்டின்போது பெற்ற பூமாலை, பரிவட்டம் முதலிய சிவ நின்மாலியப் பொருட்களைச் சண்டேசுவரர் சந்நிதியிற் சேர்த்து, "சிவதரிசனப் பலனை அளித்தருள வேண்டும்" என்று அவரைப் பிராத்தித்து, அங்கு பெற்ற திருநீற்றை அணிந்து கொள்ளல் வேண்டும் என்பது சமய நூல்களின் விதி.

சிவபெருமானுக்குச் சார்த்திய மலர் மாலைகள், ஆடை அணிகலன்கள் முதலினவும் நிவேதனம் செய்த பிரசாதங்கள் ஆகிய உணவு வகைகளும் சிவநின்மானியங்கள் என வழங்கப்படும். சிவபிரானால் ஏற்றுக்கொள்ளப்பட்டு, நின்மலம் (அழுக்கின்மை, தூய்மை) அடைந்த பொருள்கள், சிவநின்மாலியங்கள் ஆகும்.

'சிவநின்மாலியங்களைச் சண்டேசுவரர்பால் சேர்ப்பித்தல் வேண்டும்' என்று பெரியவர்கள் கூறும் நுட்பம் அறியாமையால் ஒரு சில மக்கள் கோயில்களில் சண்டேசமூர்த்தியின் முன்பு, தமது ஆடைகளின் நூல் இழைகளை அறுத்துப்போடும் சிவாபரதச் செயல் புரிகின்றனர். அது பெரும் தவறு. சிவபிரானுக்கு அணிவித்து நின்மாலியமான ஆடைகளையும், மாலைகளையும் மட்டுமே சண்டேசர்க்கு சாத்துதல் வேண்டும்.

சண்டேசுவரர், இடையறாத சிவத்தியானத்தில் ஈடுபட்டிருப்பதராதலின, அவருக்கு நம் வருகையையும் வேண்டுகோளையும் தெரிவிக்கும் வகையில், ஓர் அறிகுறியாகவே நாம் அவர்தம் திருமுன் சென்று நம் கைகளை மெல்லத்தட்டி வணங்கவேண்டும்.

—கமலா மாரியப்பன் - கோவை.

# பகவத் கீதை

"உமைப்ரியன்"

## ஒன்பதாம் அத்தியாயம்

## ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்

### பகவான் கூறியது:

*அவஜானந்தி மாம்மூடா மானுஷீம் தனுமாச்ரிதம் ।*
*பரம் பாவமஜானந்தோ மம பூதமஹேச்வரம் ।। (11)*

"என்னுடைய தெய்வீக இயல்பினையும், எல்லா உயிர்களுக்கும் தலைவனாக நான் இருப்பதையும் அறிந்து கொள்ள முடியாத மூடர்கள், ஒரு சாதாரண மனித வடிவம் எடுத்தவனாகக் கருதி என்னை இழிவு செய்கின்றனர்."

[இச்செய்யுளில் இறைவனின் அருட்திறமும், கருணை உள்ளமும், அவனுடைய நுண இயல்பும் குறிக்கப்படுகின்றன. எங்கும், எப்போதும், எதிலும் நிறைந்திருக்கும் அப்பரமாத்மா, உலக உயிர்களின் நன்மையின், மேன்மையின் பொருட்டு, தானிலையிலிருந்து இறங்கி, மனித நிலையில் அவர்களுடன் இரண்டறக் கலந்து மனித அவதாரம் [illegible]. இந்த [illegible] மறந்து இறைவனும் ஒரு சாதாரண மனிதனான் என்று நினைத்து [illegible] நிலையை இகழ்ந்து [illegible] காண்கின்றனர் மூடர்கள். தன் குழந்தையின் மகிழ்ச்சிக்காக, சிரிப்புக்காக ஒரு தந்தையானவன் சிங்கம் போலவும், பூனை போலவும், நாய் போலவும் தரையில் தவழ்ந்து குரல் எழுப்புகின்றான். அதனால் அவன் தந்தை நிலையிலிருந்து மாறுவதில்லை. ஆம் ஒரு தந்தை நிலையில் - ஒரு தாய்நிலையில் நின்று நம்மை உய்விக்கவே இறைவன் அவதாரம் கொள்கின்றான் என்பதை நினைவிற் கொள்வது நம்மைத் திருத்திக்கொள்ள வழிவகுக்கும்.]

*மோகாசா மோககர்மாணோ மோக ஞானா விசேதஸ: ।*
*ராக்ஷஸீ மாஸுரீம் சைவ ப்ரக்ருதிம் மோஹினீம் ச்ரிதா: ।। (12)*

"பேராசை கொண்டவர்கள், பயனில்லாத செயல்களைச் செய்பவர்கள், குற்றம் குறை பார்க்கும் பண்புடையவர்கள், விவேகமற்று விளங்குபவர்கள் ஆகியோர் மயக்கம் தருகின்ற ராக்ஷஸர், அசுரர் இயல்பு கொண்டவர்களாவர்."

[எப்போதும் இந்த உடம்பு நிலையானது, இன்பம் அனு



பவிக்கவே இந்த உடலுள்ளது என்று ஒருவன் நினைக்கின் றுனோ, அப்போதே அவன் காமம், ஆசை, வெறுப்பு, கோபம் போன்ற உணர்ச் சிகளுக்கு இடம் கொடுத்த வனாகின்றுன். பற்றற்று விளங்கவேண்டிய மனமானது ஆசைக்கு இடம் கொடுக்கும் போது, செய்யும் வினைக ளும், பயன்படுத்தும் அறிவும், அவனை இறைவன்பால் வழி காட்டாது. அப்போது அவன். ரஜோகுணமும், தமோ குணமும் கொண்டு வல்லரக்கனாவும், அரக்கனாகவும் திகழ்கின்றுன்.]

மஹாத்மானஸ்து மாம் பார்த்த
தைவீம் ப்ரக்ருதி மாச்ரிதா: ।
பஜந்த்யனன்யமனஸோ ஞாத்வா
பூதாதிமவ்யயம் ।। (13)

"பார்த்தா! ஆனால் மகாத்மாக் களாகிய பெரியோர் தெய்வத் தன்மை கொண்டவர்கள். அவர் கள்தாம் உலக உயிர்களுக் குப் பிறப்பிடம் என்றும் அழி யாதவன் என்றும் என்னை அறிந்து, வேறு எந்த விஷ யத்திலும் நாட்டம் கொள்ளாது என்னையே தொழுகின்றனர்."

[இயற்கையின் மீது அன்பு, தெய்வத்தின்மீது நம்பிக்கை ஆகியன மனிதனிடம் அவனி டம் உள்ள சத்துவ குணத் தால் உற்பத்தியாகின்றன. இவ் வுலக உயிர்கள் யாவும், தானும் அந்தப் பரம்பொருளிட மிருந்துதான் தோன்றினோம் என்ற உண்மையை அறிந்த வர்கள், இறுதியில் தங்களைத் தோற்றுவித்த அந்த இறைவ னையே அடைய விரும்புகின் றுர்கள். அந்த நிலையை அடை யும்போது அவர்கள் மகாத்மாக் கள் என்று அழைக்கப்பெறுகின் றனர். அப்போது மகாத்மாக் கள் பற்றற்ற மனப்பக்குவம், அன்பு, தியாகம், பொறுமை போன்ற குண இயல்புக ளின் உறைவிடமாக விளங்கு கின்றனர். ஆம் இறைநாட் டமே மனிதனை மகாத்மாவாக மேலோங்கச் செய்கிறது.]

ஸததம் கீர்த்தயந்தோ மாம்
யதன் தஸ்ச த்ருடவ்ரதா: ।
நமஸ்யன்தஸ்ச மாம் பக்த்யா
நித்ய யுக்தா உபாஸதே ।। (14)

"எப்பொழுதும் என் புகழ் பாடுபவராகவும், உறுதியான நம்பிக்கையுடன், விரதத்துடன் என்னை நினைப்பவராகவும், தூயபக்தி உணர்வுடன் என் னைத் தொழுபவராகவும் உள்ள மகாத்மாக்கள் இடைவிடாது என்னையே வழிபடுகின்றனர்."

[இங்கு மகாத்மாக்களின் இயல்பு குறிக்கப்படுகிறது. இறைவனின் அருட்திறம், மேனி யழகு, அவன் நாமத்தின் பெருமை ஆகியவற்றை எப் போதும் நினைப்பவர்களே, நினைந்து நினைந்து வாயால் புகழ்பவர்களே ஆத்மாக்கள். ஆம் ஆழ்வார்களும் நாயன் மார்களும் தங்கள் வாழ்க்கை யினை இறைச் சிந்தனையி லேயே கழித்துப் பேறு பெற் றவர்களாவர். மேலும் உட லைக் கட்டுப்பாட்டுடனும், தூயதாகவும் வைத்துக்கொள்ளு தல் மகாத்மாக்களின் இயல் பாகும். நோன்பு, காலை, மதியம், மாலை குளித்தல், பூசை விதிகளைப் பின்பற் றுதல் யாவும் மனவடக் கம், ஐம்புலன் அடக்கம், பற் றற்ற நிலை, மனஉறுதி ஆகி யவற்றை வளர்க்கும். வளர்ந்து முதிர்ந்த நிலையே மகாத்மாக் களின் அன்றுட வாழ்க்கையா கும். மேலும் எந்தவித ஆடம் பரமுமின்றிச் சடங்குகளுமின்றி, இறைவனை அடையும் வழி தூய பக்தியாகும். இது ஒரு எளிமையான கடவுளை நெருங் கும் நேர்வழியாகும். இந்த நேர் வழியில் சென்று இறைவனைத் தரிசித்த அடியவர்கள் எண் ணிக்கை இம்மண்ணில் ஏராள மாகும். இந்த பக்தி உணர் வினை நிரம்பப் பெற்றவர்களே மகாத்மாக்கள். அவர்கள் நித் யயோகிகள் என்று குறிக்கப் படுகின்றனர். அத்தகையோர் இறைவன் அருகில் இருக்கும் பேறுபெற்றவர்கள். இத்தகு மகாத்மாக்கள் நாளும் தொழும் பேறு உடையவனாக தான் இருப்பதாகக் கண்ணபெருமான் பெருமிதமாகக் கூறுகின்றுன்.]

ஞானயக்ஞேன சாப்யன்யே யஜந்தோ
மாமுபாஸதே ।
ஏகத்வேன ப்ருதக்த்வேன பஹுதா
விச்வதோமுகம் ।। (15)

"ஞானவேள்வியின்பால் ஈடுபட் டவர்கள் என்னை ஒன்ருய், வேருகவும், பலவாகவும் கண்டு வழிபடுகிருர்கள்."

[இறைவனை அடைய வழி வகுக்கும் ஞானம் எனும் பேர றிவு பெற்ற ஞானியர்கள் மூன்று வகையாக இறைவ னைத் தொழுகின்றனர். அதா வது இறைவன் ஒருவனே, மற் றவை மாயை எனும் ஸ்ரீசங் கரரின் அத்வைதம், இறைவன் எனும் பரமாத்மாவும் உயிர்கள் எனும் ஜீவாத்மாக்களும் வேறு வேறு எனும் ஸ்ரீமத்வாச்சாரிய ரின் துவைதம், இந்த உலக மும் - இயற்கையாவும் இறை வனின் பகுதிகளே, இறைவன் ஒருவனே எல்லாமாக எங்கு மாக உள்ளான் எனும் ஸ்ரீராமா னுஜரின் விசிஷ்டாத்துவைதம் ஆகிய மூன்று தத்துவங்கள்

குறிக்கப்படுகின்றன. ஆனால் இவை மூன்றும் அவரவர்களை அந்த பரமாத்மாவிடம் அழைத்துச் செல்லும் ஞானமார்க்கங்களாகும். அந்த மார்க்கங்களில் அர்ப்பணித்துக் கொள்ளும் புனித வேள்வியே ஞான யக்ஞமாகும்.]

அஹம் க்ரதுரஹம் யக்ஞ:
ஸ்வதாஹமஹ மௌஷதம் ।
மந்த்ரோ அஹமஹமேவாஜ்யமஹ
மக்னிரஹம் ஹுதம் ।। (16)

'நான் 'கிரது' எனும் வைதீக கர்மாவாகவும், மாபெரும் வேள்வியாகவும், முன்னோர்க்குப் படைக்கப்படும் உணவாகவும், மருந்தாகவும், மந்திரமாகவும், ஹோமத்தில் அளிக்கப்படும் நெய்யாகவும், அந்நெய்யை பெறும் தீயாகவும், வேள்வியின் பயன் எனும் வினையாகவும் உள்ளேன்.''

[இச்செய்யுளில் செய்யும் வினைகள் மட்டுமின்றி, எல்லாப்பொருள்களுமே பிரம்மமாக சொல்லப்படுகிறது. 'கிரது' என்பது வேதங்களில் கூறப்பட்டுள்ள ஒரு வினையாகும். வேள்வி எனும் யக்ஞம் என்பது ஸ்மிருதியில் குறிக்கப்படுகிறது. இங்கு ஔஷதம் என்பதற்கு உணவென்றும், மருந்தென்றும் சொல்லப்படுகிறது. மனதில் நினைக்கப்படுகின்ற எண்ணமே மந்திரமாகும். ஆம் வேள்வி என்று செய்யப்படும் வினை, வினையாற்ற வேண்டுமென்ற எண்ணம், ஹோமகுண்டத்தில் சொரியப்படும் நெய் எனும் அவிசு, அவ்வவிசை ஏற்றுக்கொள்ளும் தீ, எதற்காக வேள்வி செய்யப்படுகிறதோ அந்தப் பயன் எனும் வினை ஆகியனயாவும் பிரம்மமாகவே இங்கு இறைவனால் சுட்டிக்காட்டப்படுகிறது.]

பிதாஹமஸ்ய ஜகதோ மாதா
தாதா பிதாமஹ: ।
வேத்யம் பவித்ரமோங்கார ருக்
ஸாம யஜுரேவ ச ।। (17)

"நானே இந்த அண்டத்தின் தந்தை, தாய், பாட்டனார். மற்றும் வினைப்பயனைக் கொடுப்பவனும், அறிந்து கொள்ள வேண்டியவனும், தூய்மை செய்பவனும் நானே. மேலும் ஓங்காரம், ரிக், சாமம், யஜுர் வேதங்கள் ஆகியனவாகவும் இருப்பவனும் நானே "

[இந்த உலகம் தோன்ற முதல் காரணமாக இறைவன் விளங்குவதால் அவன் இந்த உலக உயிர்களுக்குத் தாயாகவும், தந்தையாகவும் அழைக்கப்பெறுகிறான். உயிர்கள் ஆற்றும் வினைகளுக்கு ஏற்றவாறு பயன்களை அள்ளித் தருபவன் வள்ளலாகிய இறைவனாகும். அதனால் அவன் 'தாதா' என்று குறிக்கப்படுகின்றான். இறை உண்மையைத் தெரிந்து கொண்டால் அதுவே எல்லா அறிவைப் பெற்றதற்கு ஒப்பாகும். ஆகவே இறைவனே அறியத்தக்க பேரறிவாகும். ஐம்பூதங்களான நீர், நெருப்பு, மண், காற்று ஆகியவற்றிற்குப் பொருட்களைத் தூய்மைப்படுத்தும் குணம், ஆற்றல் உண்டு. ஆனால் புனிதப்படுத்தப்படும் அப்பொருள்கள் மீண்டும் மாசு அடையலாம். ஆனால் ஐம்பூதங்களின் தலைவனான அவனைச் சார்ந்தார்க்கு என்றுமே புனிதத்தோடு விளங்கிடும் பெருமை உண்டு. ஆகவே அவ் இறைவன் தூய்மைக்கு இருப்பிடமாவான். ஓசையின் அடிப்படையில்தான் வேதங்களின் பெருமை பேசப்படுகின்றன. இந்த உலகத்தின் தோற்றம், வளர்ச்சி, அழிவு ஆகியவற்றை விளக்கிடும் ரிக், சாமம், யஜுர் வேதங்களின் இருப்பிடமாக இறைவன் திகழ்கின்றான். ஆம் அவனே ஓசை, அவனே வேத நாயகன்.

நான்கு வேதங்களில் இறுதியாக விளங்கிடும் அதர்வண வேதம் பின்னர் தோன்றியது. ஆதலால், அவ்வேதம் இங்குக் குறிக்கப்பெறவில்லை.]

கதிர்பர்தா ப்ரபு: ஸாக்ஷீ நிவாஸ:
சரணம் ஸுஹ்ருத் ।
ப்ரபவ: ப்ரளய: ஸ்தானம் நிதானம்
பீஜமவ்யயம் ।। (18)

"புகலிடம், வளர்ப்பவன், தலைவன், சாட்சி, வசிக்குமிடம், அடைக்கலம், நண்பன், பிறந்த இடம், சேரும் இடம், தங்குமிடம், களஞ்சியம், அழியாத வித்து (யாவும் நானே)''

[உலக உயிர்களுக்கு ஆண்டவனே கதி. அதாவது அவன் தான் நம் புகலிடம். நம்முடைய வினைகளுக்கு ஏற்ப பலன்களைத் தந்து நம் விதியை அவன்தான் நிர்ணயிக்கின்றான். நாம் உயிர்வாழ உணவு தந்து நம்மை வளர்ப்பவன் இறைவன். ஜீவாத்மாக்களாகிய உலக உயிர்களுக்கு அந்த இறைவனே பரமாத்மா - தலைவன். இங்குத் தலைவன் என்பது 'ப்ரபு' என்று குறிக்கப்பெறுகிறது. ஆம் அவன் தலைவன் - ஆண்டான். நாம் அவனது அடிமைகள். நம் உள்ள, உடல் எண்ணங்களுக்கு அவன் சான்றாகச் சாட்சியமாகத் திகழ்கின்றான். அண்டத்திலுள்ள எல்லாப் பொருள்களின், உயிர்களின் இருப்பிடம் அவனே. அதாவது தாங்குபவன் அவனே. 'உயிர்

கொடுப்பான் தோழன்' என்பார்கள். அர்ச்சுனனுக்கு உதவியது போல், கண்ணனாகிய இறைவன் உயிர்களுக்கு உற்ற காலத்தில் உதவிடும் நல்ல தோழனாக விளங்குகின்றான். அதாவது உயிர்களின் நலத்தை நாடும் நண்பனாவான் இறைவன். உலக உயிர்களின் தங்குமிடமாக ஆண்டவன் இருக்கின்றான். இறைவன் களஞ்சியம் போன்றவன். எடுக்க எடுக்க, அள்ள அள்ளக் குறையாதது களஞ்சியம். ஆம், இறைவன் நிதிக்களஞ்சியம். கருணையின் ஊற்று. அருளின் மொத்த உருவம். இறைவன் அழியாத விதை போன்றவன். சாதாரணமாக விதைகள் தங்களை அழித்து, பயிர்களை உற்பத்தி செய்கின்றன. இறைவனோ உலக உயிர்களை நாளும் படைத்துக் கொண்டிருக்கும் அழியாத வித்தாகும்.]

தபாம்யஹமஹம் வர்ஷம்
நிக்ருஹ்ணாம்யுத்ஸ்ருஜாமி ச ।
அம்ருதம் சைவ ம்ருத்யுஸ்ச
ஸதஸச்சாஹமர்ஜுன ॥ (19)

"அர்ச்சுனா! நான் வெப்பத்தைத் தருகின்றேன். மழையைப் பெய்யவும், அம் மழையைத் தடுக்கவும் செய்கின்றேன். மரணமில்லாமை, மரணம், ஸத்தும், அஸத்தும் எல்லாம் நானேதான் "

[இறைவன் தன் பிரதிநிதியான சூரியனைக் கொண்டு உலகில் வெப்பத்தை - சூட்டை வெளிப்படுத்துகின்றான். அந்த சூரிய கிரணங்களைக்கொண்டு மழையைப் பொழிவித்தும் வறட்சியையும் உண்டு பண்ணுகிறான், அவ் இறைவன். உலக உயிர்கள் வாழ்வதும், அவைகளின் உயிர் போவதற்கும் இறைவனே காரணமாவான். வினைப்பயன்களுக்கேற்றவாறு அதிக ஆயுளும், இளமையில் மரணம் போன்றன கிடைக்கப்பெறுகின்றன. இவையாவும் மனிதனின் மனம் பக்குவமடைந்து, ஞான நிலை அடையவே இறைவன் செய்யும் விளையாட்டாகும். வினையாற்றும்போது உயிர்களின் இயக்கம் சத்தாகும். கண்களுக்குப் புலப்படாத உயிர்களின் இயக்கமே அசத்தாகும். ஆம் இறைவன் சத்தாகவும், அசத்தாகவும் திகழ்கின்றான்.]

த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா
யக்ஞைரிஷ்டவா ஸ்வர்கதிம்
ப்ரார்த்தயந்தே ।
தே புண்ய மாஸாத்ய ஸுரேந்த்ரலோக
மச்னந்தி திவ்யான் திவி
தேவபோகான் ॥ (20)

"மூன்று வேதங்களைக் கற்றறிந்தவர்கள் வேள்விகளால் என்னை வழிபட்டு, சோமபானம் அருந்தி, பாவங்களிலிருந்து விடுதலை பெற்று வானுலகை அடைய விருப்பம் கொள்கின்றனர். அவர்கள் புண்ணியம் மிக்க தேவேந்திரன் வாழும் உலகத்திற்குச் சென்று, சுவர்க்கலோகத்தில் இனிமை மிக்க சுகபோகங்களை அனுபவிக்கின்றனர்."

[ஞான, பக்தி வழிமுறைகளைப் பின்பற்றி நிலையான முக்தி பேரின்பத்தைப் பெற விரும்பாமல், ரிக், சாம, யஜுர் வேதங்களில் குறிப்பிட்டுள்ள கர்ம காண்டத்தைப் பின்பற்றி, அதாவது வேத மந்திரங்களைக் கற்று அதனால் பெறும் ஆற்றலால் தேவலோகத்தை அடைந்து, 'சோமபானம்' எனும் மதுவினை அருந்தி, சுகபோகங்களை அனுபவிக்கவே சிலர் ஆசைப்படுகின்றனர். ஆனால் அவ் இன்பங்களை, அவர்கள் ஆற்றியுள்ள புண்ணிய பயன்கள் அவர்கள் கணக்கில் இருக்கும் வரைதான் அனுபவிக்க முடியும். புண்ணிய பயன்கள் மறைந்த பிறகு, அவர்கள் மீண்டும் பிறவி எனும் சுழற்சியில் தள்ளப்படுகின்றனர். ஆகவே இவர்களால் இறுதி வரை உபநிஷத்துக்கள் கூறியுள்ள பிரம்மஞானத்தைப் பெற முடிவதில்லை என்று இறைவன் இச்செய்யுளில் மறைமுகமாகச் சுட்டிக் காட்டுகிறார்.]

(தொடரும்)



## ஏக காலத்தில் வாழ்ந்த அவதாரங்கள்

1. நான்கு குமாரர்கள், ஸ்ரீவராகர், ஸ்ரீநரசிம்மர் —க்ருதயுகம்
2. ஸ்ரீபரசுராமர், ஸ்ரீராமர் —த்ரேதாயுகம்
3. பலராமர், ஸ்ரீக்ருஷ்ணர், வேதவியாசர் —தக்வாபரயுகம்
4. ஸ்ரீவராகர், ஸ்ரீனிவாசர் —கலியுகம்

திருமதி. ஆர். ராஜலெக்ஷ்மி - திருச்சி.



# எம்பார்



திரு. பஞ்சு. அரங்கநாதன் - கீழரங்கம்.

### முன்னுரை :

ஸ்ரீ வைஷ்ணவத்தின் நிகரில்லாத மேதையும், சிந்தனைக் களஞ்சியமும், கருணை வள்ளலுமான ஸ்ரீராமானுஜரின் [1017-11137 A.D] முக்கிய சீடர் எம்பார். இவர் ஸ்ரீராமானுஜரின் ஒன்று விட்ட சகோதரன். கோவிந்தன் என்ற இயற்பெயர் கொண்டு காளஹஸ்தியில் சைவ சமயப் பணி செய்தார். பிறகு ஸ்ரீராமானுஜரால் ஆட்கொள்ளப்பட்டு வைணவத் தூண்களில் ஒன்றாய் விளங்கினார். 'எம்பார்' பற்றிய ஒரு அறிமுகமே இக்கட்டுரையின் பயனாகும்.

### திரு அவதாரம் :

மழலை மங்கலம் கமலநயன பட்டர், த்யுதிமதி பிராட்டி இருவருக்கும் கிபி. 1025-ல் குரோதன ஆண்டு தை மாதம் பௌர்ணமி திதி புனர்வசு நட்சத்திரம் கூடிய சுபதினத்தில் கோவிந்தன் பிறந்தார். சிறுவயதில் தன் தந்தையிடமே வேத சாஸ்திரங்களைக் கற்றார். பிறகு தன் ஒன்றுவிட்ட மூத்த சகோதரன் லக்ஷ்மணன் (ஸ்ரீராமானுஜர்) காஞ்சீபுரம் குருயாதவப்பிரகாசரிடம் (ஸ்ரீகோவிந்த ஜீயர்) வேதாந்த பாடம் படிப்பது கேட்டு கோவிந்தனும் அங்கேயே படித்தார்.

### விந்தியமலையில் விபரீதம் :

குருகுலத்தில் குருயாதவப் பிரகாசருடைய சாஸ்திர அர்த்தங்களை மறுத்து வாதம் செய்து கொண்டு இருக்கும் சீடன் லட்சுமணனை காசியாத்திரை சென்று மணி கர்ணிகா கட்டத்தில் தள்ளிவிட்டு அழிக்கத் திட்டமிட்டார் குரு. அந்தப்படியே யாத்திரையும் சென்றது. இந்த விபரீத திட்டத்தை அறிந்த கோவிந்தன் தன் அண்ணன் லட்சுமணனை எச்சரிக்க சமயம் பார்த்துக்கொண்டு இருந்தார். ஆனால் முடிந்த அளவு அண்ணனும் தம்பியும் ஒன்று சேராமல் பார்த்துக்கொண்டனர் மற்ற சீடர்கள்.

### லட்சுமணனைக் காப்பாற்றுதல் :

யாத்திரை வழியில் விந்தியமலைக்காட்டில் அனைவரும் அயர்ந்து உறங்கும் வேளையில் கோவிந்தன் மெதுவாக எழுந்து லட்சுமணனை எழுப்பி தனியாக அழைத்துச் சென்று "அண்ணா, குரு விரோதம் காரணமாக உன்னை கங்கையில் மூழ்கடிக்கப்போகிறார். எனவே தப்பி ஓடிவிடு" என்று எச்சரித்துப் பிரிந்தான்.

### ஸ்ரீராமானுஜர் :

விந்திய மலைக் காட்டில் தம்பி கோவிந்தனால் கொலை முயற்சியிலிருந்து தப்பிய லட்சுமணன் காஞ்சி வரதராஜப்பெருமாள் அருளால் வைணவத்தின் ஆசார்யராகி ராமானுஜ வள்ளலாகி ஸ்ரீரங்கம் சென்று பெரிய பெருமாளுக்கு சேவை செய்து வந்தார். அவர் மனம் கோவிந்தனை எண்ணியது.

### உள்ளங்கை கொணர்ந்த நாயனார் :

விந்தியமலைக் காட்டில் லட்சுமணன் தப்பிய மறுநாள் காலை குரு உள்பட அனைவரும் லட்சுமணனைத் தேடினர். கோவிந்தனோ "எனக்குத் தெரியாது நான்பார்க்கவில்லை" என்று மறுத்தான். பிறகு யாத்திரை காசி சென்றது. ஒருநாள் கங்கையில் நீராடிய கோவிந்தன் கையில் ஒரு சிவலிங்கம் கிடைத்தது. இதை அறிந்த குரு கோவிந்தனை "உள்ளங்கை கொணர்ந்த நாயனார்" என்று கொண்டாடினார். சொப்பனத்தில் சிவபெருமான் தோன்றி கோவிந்தனை காளஹஸ்திக்கு வரப் பணித்தார். குருவும் மகிழ்ந்தார். காளஹஸ்தி ஆலய நிர்வாகிகளும் கோவிந்தனைப் பணிந்து கோவில் பொறுப்பை ஒப்படைத்தனர். உள்ளங்கை கொணர்ந்த நாயனார் சிவப் பழமாய் ருத்ரஸ்தோத்திரம் செய்து காளஹஸ்தியில் சிவப் பணி செய்து வந்தார்.

### திருவேங்கடமலையில் கோவிந்தன் :

ஸ்ரீரங்கத்தில் பெரிய பெருமாளுக்கு சேவை செய்து வந்த வைணவத்தின் நிகரில்லாத ஞானி ஸ்ரீராமானுஜர், விந்தியமலையில் தன் உயிரைக் காப்பாற்றிய ஒன்றுவிட்ட தம்பி கோவிந்தன் வழி தவறிப்போயிருப்பதை நினைத்து வருந்தி திருமலையில் சேவை செய்து வரும் பெரிய திருமலைநம்பிகளுக்குக் கோவிந்தனைத் திருத்திப் பணிகொள்ளும்படி கட்டளையிட்டார். ஸ்ரீசைலபூர்ணர் என்னும் பெரிய திருமலைநம்பி மூன்றுமுறை கால

ஹஸ்தி சென்று கோவிந்த னைத் திருத்தி மனம் மாற்றி ஸ்ரீவைஷ்ண சேவையில் ஈடு படுத்தினார். பரமபாகவதராக மாறிய கோவிந்தனும் பெரிய திருமலை நம்பிக்குப் பணிவிடை செய்து காலம் கழித்து வந்தார்.

**நரகமே மகிழ்ச்சி :**

பெரிய திருமலைநம்பியாகிய தனது ஆச்சாரியாருக்குத் தின மும் படுக்க மெத்தை போட்டு விட்டு முதலில் தான் படுத்து உருள்வது கோவிந்தன் வழக் கம். ஒருமுறை திருமலை வந்த ஸ்ரீராமானுஜர் இந்த அபசா ரத்தைக் கண்டு வெளிப்படுத் திடவே விசாரணை நடந்தது.

பெரியதிருமலை நம்பி : கோவிந்தா! இன்று என்படுக்கையில் நீ படுத்தாயா?

கோவிந்தன் : ஆம் சுவாமி. தினமும் அப்படித்தான் செய்கிறேன்.

பெரியதிருமலை நம்பி : ஆசார்யன் படுக்கையில் படுப்பதன் தண்டனை என்ன?

கோவிந்தன் : தெரியும் சுவாமி. மீளா எரிநரகில் வீழ்வேன்.

பெரியதிருமலை நம்பி : எரிநரகம் என்று தெரிந்தும் ஏனப்பா அப்படிச் செய்தாய்

கோவிந்தன் : சுவாமி. தங்களுடைய படுக்கையில் மேடுபள்ளம், உறுத்தல், பூச்சி, புழு ஏதேனும் இருந்தால் தங்கள் உறக்கம் கெடும். ஆசார்யன் உறக்கம் கெடலாமா? எனவ தினமும் நானே படுத்துச் சோதிக்கிறேன். இதனால் எனக்கு எரி நரகம் கிடைக்கும். இருந்தாலும் ஆசார்ய வையே என் ஆத்ம திருப்தி.

கோவிந்தனின தியாக உள ளத்தில், ஆசார்ய பணிவி டையில் மனம் நெகிழ்ந்தனர் பெரிய திருமலை நம்பியும், ஸ்ரீராமானுஜரும்.

**ஸர்ப்ப சிகிச்சை :**

கோவிந்தன் ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தின் அடிப்படை யான கருணையை அளவுக்கு மீறி அனுஷ்டித்து வந்தார். ஒருமுறை மிகுந்த வேதனையு டன் இருந்த சர்ப்பத்தின் நாக் கில் தைத்திருந்த முள்ளை எடுத்து நோயைக் குறைத்தார்.

**ஸ்ரீரங்கத்தில் கோவிந்தன் :**

பெரிய திருமலை நம்பி ஸ்ரீராமானுஜருக்கு தம் அன்புப் பரிசாக கோவிந்தனை அளித் தார். ஸ்ரீராமானுஜரும் கோவிந் தனைக் கடாட்சித்து அவ ரைத் திருத்திப் பணி கொண் டார். ஸ்ரீராமானுஜரது அவை யில கோவிந்தன் பெருமை மெதுவாக புலப்படத் தொடங் கிற்று. ஒருநாள் கோவிந்தன் தாசி வீட்டு வாசலில் நீண்ட நேரம் நின்று கொண்டிருந்தார். ஸ்ரீவைஷ்ணவர்கள் மூலம் விபர மறிந்த ஸ்ரீராமானுஜர் விசாரிக் கையில் 'ஸ்ரீராமனுஜர் பற்றிய இனிய பாடல தாசி வீட்டில் ஒலிததது. அதில லயிதது நினறேன்' எனறார கோவிந் தன. புகார செயத வைண வரகள் பாடடுக் கேட்டதை ஒப் புககொண்டனர. கோவிநத னுடைய திரிகரண சுததியை அனைவரும போறறினர்.

**இரவுதான் இருட்டு இல்லை :**

கோவிநதன ஸ்ரீரஙகம வந்த பினனர் அவர் தாயும, மனைவி யும ஸ்ரீரஙகம வநது குடும்பம் நடத்தினர். மனைவி பெரியவ ளாகியும் கோவிந்தன் இல்லறத் தில் ஈடுபடவில்லை. இவ்விஷ யத்தில் தாயையும அலட்சியம செய்தார். எனவே ஸ்ரீராமா னுஜரிடம் புகார் போயிற்று. உடையவரும் கோவிந்தனைக் கூப்பிட்டு இல்லற தர்மங் களை நிறைவேற்றக் கட்ட ளையிட்டார். அன்றிரவு முழு அலங்காரத்துடன் பள்ளி யறைக்கு வந்த மனைவியிடம் பகவானுடைய பிரபாவங்களை எடுத்துரைத்தார். இரவும் கழிந் தது. மீண்டும் புகார் உடை யவருக்குப் போயிற்று. விசார ணையும் தொடங்கியது.

ஸ்ரீராமானுஜர் : கோவிந்தா, நேற்றிரவு என்ன நடந்தது?

கோவிந்தன் : சுவாமி, தங்கள் கட்டளைப்படி இல்லற தர்மம் நிறைவேற்ற இரண்டு விஷயம் வேண்டும். அவை கிடைக்கவில்லை.

ஸ்ரீராமானுஜர் : என்னன்ன வேண்டும் கோவிந்தா?

கோவிந்தன் : தனிமையும், இருட்டும் இல்லறத்திற்கு வேண்டும் சுவாமி.

ஸ்ரீராமானுஜர் : தனியறையில் இரவில் தானே இருந்தாய் கோவிந்தா?

கோவிந்தன் : தனி அறைதான் சுவாமி. ஆனால் தனிமையில்லை. இரவுதான் சுவாமி ஆனால் இருட்டு இல்லை

உடையவர் : தெளிவாகச் சொல்லும் கோவிந்தப்பெருமாளே.

கோவிந்தன் : சுவாமி, தனி அறைதான். ஆனால் அந்தர்யாமியான பகவான் எப்பொழுதும் பக்கத்தில் இருப்பதால் தனிமையில்லை. அதேபோல் இரவுநேரம்தான் சுவாமி. ஆனால் இருட்டில்லை. ஏனென்றால் பகவானின் ஜோதி பிரகாசமாக உள்ளது. அடியேன் என்ன செய்வேன் சுவாமி.

**எம்பார் :**

கோவிந்தப் பெருமாளுடைய வைராக்கியத்தையும் பிரபாவத்தையும் அறிந்த ஸ்ரீராமானுஜர் பரமகிருபையுடன் கோவிந்தனுக்கு சந்நியாச ஆசிரமம் அருளி திரிதண்ட கஷாயம் அளித்தார். மேலும் "எம்பெருமானார்" என்ற பெயரையே சூட்டினார். ஆனால் கோவிந்தன் 'குருபாதத்தைத் தான் சுமக்க வேண்டும். குரு நாமத்தைச் சுமக்கக் கூடாது' என்று மறுக்கவே எம்பெருமானார் என்ற பெயரை சிறிது சுருக்கி "எம்பார்" என்று அருளினார்.

**பராசரபட்டரின் குரு :**

கூரத்தாழ்வான் குமாரரும் ஸ்ரீரங்கம் பெரிய பெருமாள் பொங்கல் பிரசாதம் உண்டு, அதனால் மேற்படி தம்பதிகளுக்குப் பிறந்தவரே பராசரபட்டர். பராசரபட்டருக்கும் எம்பார் தான் ஆசார்யார். எம்பாரும் பராசரபட்டருக்கு எல்லா உண்மைப் பொருளையும் விளக்கிக் கூறினார்.

**பரமபதமடைதல் :**

கி.பி. 1137ல் ஸ்ரீராமானுஜர் பரமபதமடைந்த சிலநாளில் எம்பாரும் திருநாட்டுக்கு நடந்தார். அவருக்கு எம்பாரின் தம்பியான சிறிய கோவிந்தப்பெருமானைக் கொண்டு சந்நியாசிகளுக்கு உரிய வகையில் பள்ளிப் படுத்தல் நடைபெற்றது.

**முடிவுரை :**

ஸ்ரீராமானுஜரின் உயிரை ஒரு முறை காத்தவர். சைவ சமயத்தில் இருந்து பெரிய திருமலைநம்பியால் திருத்தப்பட்டவர். ஸ்ரீராமானுஜரால் த்ரிதண்ட கஷாயம் அளித்து எம்பார் என்ற பெயர் பெற்றவர். பராசரபட்டரின் குருநாதர். ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தின் அடிப்படையான கருணை, விரக்தி, ஆசார்யபக்தி இவற்றின் சின்னமாக விளங்கியவர், கோவிந்தப்பெருமாள் என்னும் எம்பார். நவீனகால போலித்துறவிகளைப் போலன்றித் தூய துறவி வாழ்க்கை வாழ்ந்தவர் எம்பார். இக்கட்டுரையால் எம்பார் பற்றி சிறிது அறிந்தோம்.

குரும்பரம்பரை வாழ்க.



## ஸ்ரீஅனுமானுக்கு வடைமாலை, வெற்றிலை(ப்பட்டி) ஏன் சாத்துகிறார்கள்?

இலங்கையிலிருந்து அனுமான் சீதையை வணங்கி விடை பெறுகிறர். சீதை அருகில் இருந்தது வெற்றிலைக் கொடி. வெற்றிலையும் மங்கலப்பொருள்தானே என்று ஒரு இலையைக் கிள்ளி அனுமான் தலையில் போட்டு ஆசீர்வதித்தாள். பின்பு வெற்றிலைக் கொடியை மாலை செய்து போட்டு வாழ்த்தி அனுப்பினாள் சீதை. ஆகவே மக்களும் வெற்றிலை சாத்தி தாங்கள் நினைத்தது நிறைவேற பிரார்த்தனை செய்கிறர்கள்.

ஆதாரம் : ---ஸ்ரீஆஞ்யநேயப் பிரபாவம்.

தகவல் : திரு. ஆர். மணிகண்டன் - சென்னை.

முன்பு ஒரு சமயம் நவக்கிரகங்களில் அதிகக் குரூரிகளான ராகுவும், சனியும் அனுமானிடம் தோல்வியுற்றதனால் அனுமானுக்குக் கீழ்ப்படிந்தார்கள். பூவுலகில் மாநதரகளுககுச் சனியாலும், ராகுவாலும் ஏதேனும் இடையூறு ஏற்படின அவர்களைத திருப்திப்படுத்துவதன் பொருட்டு, ராகுவுககுப் பிரியமான உளுந்திலும், சனிககுப் பிரியமான எள எணணையாலும் செய்த வடைமாலையை ஆஞசநேயருககு சாததி வழிபடடால, சனி, ராகு இவர்களுடைய இடையூறிலிருந்து மனிதர்கள் விடுபடுகிறர்கள் எனபதாலதான அனுமானுக்கு வடைமாலையைச சாததுகிறாரகள்.

ஆதாரம் . ---விஜயபாரதம்.









# நம்மாழ்வார்

திருமதி. சு. பொன்னம்மாள் - புத்தூர்.

முன்னுரை :

கிடைத்தற்கரிய பிறவி மானிடப்பிறவி. இதைத் தான் அரிது அரிது மானி டராய்ப் பிறத்தல் அரிது என்றார் ஒளவையார். மானி டராய்ப் பிறந்திருக்கும் நம்மு டைய வாழ்வு மிகவும் இன்றி யமையாதது. ஒவ்வொரு மனி தனும் மனம், வாக்கு, காயம் இம்மூன்றால் கட்டுப்பட்டு வாழ வேண்டும். இதுவே ஆன் மீக உலகிற்கு மிகவும் அடிப் படை. இவையே பக்தி நெறிக்கு மனிதனை அழைத்துச் செல் பவை. பக்தி செலுத்தவேண்டிய மூன்று எளிமையான வழிமு றைகளைப் பகவானே கீதையில் கூறுகிறார்.

1. இறைவனின் நாமத்தை எப்போதும் உச்சரிப்பது.
2. இறைவனை வணங்கும் போது பூக்களால் அர்ச்சிப்பது.
3. நம்முடைய செயலற்ற முறைகளை இறைவனிடமே சொல்லி முறையிட்டு அவனிடம் சரணடைவது.

இந்த வழி முறைகளை நாம் கடைப்பிடித்து ஒழுகினால் வாழ்வு வளம்பெறும். நம் ஆன் மீக அருளாளர்கள் நமக்கு காட் டிச் சென்ற நல்ல வழிமுறை களை நாம் பின்பற்ற வேண் டும். பன்னிரு ஆழ்வார்கள் தோன்றி ஆன்மீகத்தை உல கெங்கும் பரப்பினர். அவர்க ளில் ஒருவரான நம்மாழ்வா ரின் சிந்தனையை விளக்குவதே இக்கட்டுரை.

முன்னுரித்த திருவிருத்தம்
நூறு பாட்டும்
முறையின் வருமாசிரியம்
ஏழு பாட்டும்
மன்னிய நற்பொருட் பெரிய
திருவந்தாதி
மறவாத படியெண்பத்தேழு பாட்டும்
பின்னுரைத்ததோர் திருவாய்மொழி
யெப்போதும்
பிழையறவாயிரத்தொரு நூற்றிரண்டு
பாட்டும்
இந்நிலத்தில் வைகாசி
விசாகந்தன்னில்
ஏழிற் குருகை வருமாறுஇரங்குநீயே
—தேசிகர்

தாமிரவரணி நதிக்கரையில் அமைந்துள்ள ஆழ்வார் திரு நகர் என்னும் ஊரில் அவ தரித்தார். வைணவ சமயத் தின் தாய் என்று போற்றப்ப டும் இவருக்கு மாறன் சடகோ பன், சடாரி, பராங்குசர் என் பன போன்ற திருப்பெயர்கள் உண்டு. சிறந்த சொல்லாற் றலும், செயலாற்றலும் மிக்க வர். திரு விருத்தம், திருவா சிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி முதலிய நூல் களை எழுதியவர். இவர்மீது சடகோபர் அந்தாதி எனும் பெயரில் கவிச்சக்கரவர்த்தி கம் பர் தனிப் பிரபந்தமே இயற்றி யிருப்பது அவருக்குப் பெருமை சேர்ப்பதாகும்.

தருகை நீண்ட தயரதன்தான்தரும்
இருகை வேழத்திராகவன் தன்கதை
தருகை வேலைத் தரைமிசைச்
செப்பிடக்
குருகைநாதன் குரைகழல் காப்பதே
—கம்பர்

## பாடிய பாசுரங்கள்

திருவிருத்தம் 100, திருவாசிரியம் 7, பெரிய திருவந்தாதி 87, திருவாய்மொழி 1102 ஆக மொத்தம் 1296 பாசுரங்கள் பாடியுள்ளார்.

## திருவாசிரியம்

பிறைச்சந்திரனை முடியில் அணிந்துள்ள சிவபெருமானும், பிரமனும், ஐம்பூதங்களும், பிறவற்றையும் தம்முள் அடக்கி ஓர் ஆலிலையின் மீது பள்ளி கொண்ட எம்பெருமானை அல்லாது வேறு தெய்வமும் இல்லை என்றவாறு அமைந்த பாடல்.

நளிர்மதிச் சடையனும்
நான்முகக்கடவுளும்
தளிரொளி இமையவர் தலைவனும்
முதலா
யாவகை உலகமும் யாவரும்
அகப்பட
நிலநீர் தீகால் சுடரிருவிசும்பும்
மலர்சுடர்பிறவும் சிறிதுடன் மயங்க
ஒருபொருள் புறப்பாடின்றி முழுவதும்
அகப்படக் கரந்து ஓர் ஆலிலைச்
சேர்ந்தஎம்
பெருமாமாயனை யல்லது
ஒரு மா தெய்வம் மற்றுடைய
மோயாமே?

## திருவாய்மொழி

உள்ளத்தில் எப்பொழுதும் இறைவனையே எண்ணிக்கொண்டிருப்பார்க்கு எல்லாம் இறைவனாகவே தோன்றுவர். இறைவனிடம் அன்பு கொண்டவர்கள் யாவற்றையும் இறைவனின் திருவுருவமாகவே கருதுவர். அவருக்கு எல்லா விதத்திலும் ஆட்பட்டு இருப்பர் என்பதை,

திரியும் காற்றோடு அகல்விசும்பு
திணிந்தமண் கிடந்தகடல்
எரியும் தீயோடு இரு சுடர்தெய்வம்
மற்றும் முற்றுமாய்
கரியமேனியன் செய்ய தாமரைக்
கண்ணன் கண்ணன்
விண்ணோர்இறை
கரியும் பல்கரும்குஞ்சிஎங்கள் சுடர்முடி
அண்ணல் தோற்றமே

எனப்பாடுகிறார்.

எனக்குத் தாயும் தந்தையும் நீயே! என் அறியாமையைப் போக்கி சிறந்த அறிவைத் தந்தவனே! நீ எனக்குச் செய்த உதவிகள் யாவும் என் சிற்றறிவுக்குள் அடங்காதவையே என்று இறைவனைப் புகழ்ந்து பாடும் பாடல் இது.

"ஒத்தார் மிக்காரை இலையாய
மாமாய
ஒத்தாய் எம்பொருட்டும் உயிர்ஆய்
என்னைப்பெற்ற
அத்தாய் ஆய்தந்தை ஆய்
அறியாதன அறிவித்து
அத்தா நீசெய்தனை அடியேன்
அறியேனே?

"அமுதம் போன்றவனும் ஞாயிற்றின் ஒளியை உடையவனுமாகிய மணிவண்ணனைத் தூய உள்ளத்தால் தொழுது வணங்கினால் துன்பங்கள் நீங்கி நம் வாழ்க்கை நலமுடன் அமையும் என்பதை,

எழுமைக்கும் எனது ஆவிக்கு
அமுதத்தினை
எனது ஆர்உயிர்
கெழுமிய கதிர் சோதியை
மணிவண்ணனைக்
குடக் கூத்தனை
விழுமிய அமரர் முனிவர் விழுங்கும்
கன்னல் கனியினை
தொழுமின் தூயமனத்தராய்
இறையும் நில்லா
துயரங்களே

என்று பாடுகிறார்.

இறைவன் ஒருவனே என்பதைக் கூறும் பாடலாவது:

நாம் அவன் இவன் உவன் அவள்
இவன் உவன் எவன்
தாம் அவர் இவர் உவர்
அது இது உது எது
வீம் அவை இவை உவை அவை
நலம் தீங்கு அவை
ஆம் அவை ஆய் அவை ஆய்
நின்ற அவரே!

இறைவன், நிலம், நீர், விசும்பு, காற்று என எங்கும் பரந்துள்ளான் என்பதை,

பரந்ததன் பரவையுள் நீர்தொறும்
பரந்துளன்
பரந்த அண்டம் இது என நிலம்
விசும்பு ஒழிவு அறக்
கரந்த சில் இடந்தொறும் இடம்
திகழ் பொருள்தொறும்
கரந்து எங்கும் பரந்துளன் இவை
உண்டகரனே

எனப்போற்றிப் பாடுகின்றார்.

திருமாலின் திருவடிகளைத் தொழுதால் வாழ்வில் நலமும் வளமும் பெறலாம் என்பதை,

உயர்வு அற உயர்நலம் உடையவன்
எவன்? அவன்
மயர்வு அற மதிநலம் அருளினன்
எவன்? அவன்
அயர்வு அறும் அமரர்கள் அதிபதி
எவன் அவன்
துயர் அறுசுடர் அடிதொழுதெழு
என் மனனே

எனப்பாடுகிறார்.

யாவையும் எவரும் தானால் அவரவர்
சமயந்தோறும்

தோய்விலன் புலனைந்துக்கும்
சொலப்படான் உணர்வின் மூர்த்தி
ஆவிசேர் உயிரின் உள்ளால் ஆதும்
ஓர் பற்று இலாத
பாவனை அதனைக் கூடில்
அவனையும் கூடலாமே

எனப்பாடுகிறார்.

நாம் செய்த வினைகள் ஒழிய அவன் பாதம் பணிந்து வணங்க வேண்டும் என்பதை

கண்டேன் கமல மலர்ப்பாதம்
காண்டலுமே
விண்டே ஒழிந்த வினையாயின
எல்லாம்
தொண்டே செய்து என்றும் தொழுது
வழியொழுக
பண்டே பரமன் பணித்த
பணிவகையே'
பாதம் நாளும் பணியத்தணியும்பிணி
ஏதம் சாராஎனக்கேல் இனிஎன் குறை
வேதநாவர் விரும்பும்
திருக்கண்ணபுரத்து
ஆதியானை அடைந்தார்க்கு
அல்லல் இல்லையே"

என்று பாடுகிறார்.

## அகப்பாடல்கள் :

மக்கள் அடையவேண்டிய உறுதிப்பொருள்கள் நான்கு. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பனவாகும். இன்பத்தை அகமென்வும், ஏனைய மூன்றையும் புறமெனவும் கூறுவர. தன்னைத் திருவேங்கடவனின் காதலியாகப் பாவித்து அவன கூறும் பாடல்கள் மிகவும் உயர்வுள்ளன ஆகும்.

பெண்பிறந்தார் எய்தும் பெருந்துயர்
காண்கிலேன் என்று
ஒண் சுடரோன் வாராது ஒளித்தான்
இம்மண் அளந்த
கண்பெரிய செவ்வாய் எம்கார்
ஏறுவாரானால்
எண்பெரிய சிந்தைநோய் தீர்ப்பார்
ஆர்என்னையே

என்று பாடுகிறார்.

நாரைக்கூட்டங்களைப் பார்த்துப் 'பொலிவோடு விளங்கும் நீரோடையில் இரை தேடும் நாரைகளே! அருள் கூர்ந்து எனது வேண்டுகோளை ஏற்று திருவண் வண்டூருக்குச் சென்று அப்பெருமானைக் காணாது வருந்துகின்ற துயரை, அவன்மீது கொண்ட காதலை நீங்கள் கூறுங்கள்' என நாரையைத் தூதுவிடுகின்றார்.

வைகல் பூங்கழிவாய் வந்து மேயும்
குரு கினங்காள்
செய்கொள் செந்நெல் உயர்
திருவண்வண்டூர் உறையும்
கைகொள் சக்கரத்து என் கனிவாய்ப்
பெருமானைக் கண்டு
கைகள் கூப்பிச் 'சொல்லீர்
விளையாட்டியேன் காதன்மையே

மேலும் நாரையைப் பார்த்து 'நீங்கள் சொல்வதை அவன் ஏற்காவிட்டால் எனக்காக அவனது சிவந்த திருவடிகளைப் பணிந்து அவனிடம் முறையிடுங்கள்' என்பதாக அமைந்த பாடலிது.

"காதல் மென்பெடையொடு உடன்-
மேயும் கரு நாராய்
வேத வேள்வி ஒலி முழங்கும் தண்
திருவண் வண்டூர்
நாதன் ஞாலம் எல்லாம் உண்ட
நம் பெருமானைக் கண்டு
பாதம் கைதொழுது பணியீர்
அடியேன் திறமே"

இவ்வாறு இறைவனைக் காதலியாகப் பாவித்துப் பல பாடல்களைப் பாடியுள்ளார். திருக்கோளூர் எனனும் பதியில் கோயில் கொணடுள்ள இறைவனைத் தன மகள விரும்பி சென்றதாக நற்றாய் ஏங்கி அழுதல போல பாடிய அகப்பொருள் அமைந்த பாடல் இது.

உண்ணுஞ்சோறு பருகுநீர்
தின்னும் வெற்றிலையுமெல்லாம்
கண்ணன் எம்பெருமான் என்றென்
றே கண்கள் நீர்மல்கி
மண்ணினுள் அவன் சீர்வளம் மிக்கு
அவனூர்வினவி
திண்ணம் என் இளமான்புகும்
ஊர் திருக்கோளூரே.

## பன்னிரு நாமங்கள்

இறைவனின் பன்னிரு நாமங்களாகிய கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திருவிக்கிரமன், வாமனன், ஸ்ரீதரன், ரிஷிகேசன், பத்மநாபன், தாமோதரன் என்னும் நாமங்களையும் 'தம்முடைய பாக்களில் அமைத்துப் பாடுகிறார் ஆழ்வார். இப்பாடல்கள் அந்தாதித் தொடைபெற்றுவந்துள்ளன. சிவந்த அழகிய திருக்கண்களை உடையவனும் தேவர்கள் தலைவனும் ஆகிய நாராயணனால் என்னைச் சேர்ந்தவர்கள் ஏழேழ் பிறப்புகளிலும் பக்தராகப் பிறவி பெற்றார்கள் என்பதாக அமைந்த பாடல் இதோ.

கேசவன் தமர் கீழ்மேல்
எமரேழ் எழுபிறப்பும்
மாசதிர் இதுபெற்று நம்முடை
வாழ்வு வாய்க் கின்றவா
ஈசன் என் கருமாணிக்கமென்
செங்கோலக் கண்ணன் விண்ணோர்
நாயகன் எம்பிரான் எம்மான்
நாராயணனாலே

## முடிவுரை :

நம்மாழுவார் வேதங்களை அடியொற்றிப் பாடல்களைப் பாடியுள்ளார். பக்தியையும் ஞானத்தையும் பரப்பியவர்; வைணவம் தழைத்தோங்கப் பாடுபட்டவர். அவர்தம் பாசுரங்களைப் பாடி பக்தி நெறி வளர்ப்போமாக! ♣

பகவானின் பக்க பலத்தைப் பெற பக்தர்கள் அவ்வப்போது ஆண்டவனுக்கு அபிஷேகத்தைச் செய்து பரவசமடைவார்கள்.

திருமஞ்சனம் என்று வைஷ்ணவ சமயத்தினரும், அபிஷேகம் என்று சைவ சமயத்தினரும் பெயரிட்டு நடத்தி வருகிறார்கள்.

குறிப்பிட்ட நாட்களில் - குறிப்பிட்ட தெய்வ சக்திகளுக்கு திருமஞ்சனமும் - அபிஷேகமும் செய்யப்பட்டு வருகிறது.

சிவபெருமானுக்கும் - ஸ்ரீகணபதிக்கும் நித்தியமும் அபிஷேகமும் செய்தாக வேண்டும்.

திருமஞ்சனம் - அபிஷேகம் செய்யவேண்டுமானால் அதற்குரிய பொருள்களைத்தான் உபயோகப்படுத்த வேண்டும்.

உபயோகப்படுத்தப்படும் பொருள்களுக்கு ஏற்ப பகவான் நமக்குப் பலாபலன்களை அளிப்பார் என்ற பெருநம்பிக்கையும் இருந்து வருகிறது.

அதன்படியாக..........

* அரிசிமாவைக்கொண்டு அபிஷேகம் செய்தால் நமது கடன்கள் அகலும்.
* அன்னாபிஷேகம் செய்தால் நமது இஷ்டங்களை - நினைத்த காரியங்களை நிறைவேற்றம் செய்யப்பட்டு விடும்.
* இளநீர் கொண்டு அபிஷேகம் செய்வித்தால் போக பாக்யம் தரும்.
* எலுமிச்சம் பழச்சாறு எடுத்து அபிஷேகம் செய்தால் பகை அழியும். எல்லோரும் இனிமையாகப் பழகுவார்கள்.
* கங்கா ஜலம் கொண்டு அபிஷேகம் செய்துவந்தால் சர்வ புண்யங்கள் பெறுவதோடு சகல பாபங்களும் அழியும்.
* கரும்புச்சாறு எடுத்து அபிஷேகம் செய்தால் ஆரோக்யத்தைப் பெறலாம்.
* சந்தனாதி தைலத்தால் அபிஷேகம் செய்தால் சுகத்தைப் பெறுவது உறுதி. சுறுசுறுப்பு எப்போதும் இருந்து வரும்.
* சந்தனத்தால் அபிஷேகம் செய்தால் திருமகள் எப்போதும் நமது இல்லத்தில் வாசம் செய்வாள்.
* சாத்துக்குடி பழச்சாறு எடுத்து அபிஷேகம் செய்தால், துக்கங்கள் போகும். இன்பம் பெருகும்.
* தயிரால் அபிஷேகம் செய்து விட்டால் நல் புத்திரபாக்யத்தைப் பெறுவது உறுதி.
* திராட்சை ரசம் அபிஷேகம் திட சரீரத்தைக் கொடுக்கும்.
* பஞ்சாமிருதம் தயார் செய்து வைத்தால், சம்பத்து நல்கும்.
* பலாப்பழம் கொண்டு அபிஷேகம் செய்தால் மங்களத்தைப்பெறுவது உறுதி.
* பஞ்சகவ்யம் கொண்டு அபிஷேகம் செய்துவிட்டால் நாம் செய்த பாவங்கள் அகன்று விடும்.
* பால் கொண்டு அபிஷேகம் செய்தோமாயின் ஆயுளை விருத்தி செய்து கொள்ள முடியும்.
* நல்லெண்ணையினால் அபிஷேகம் செய்தால் நல்ல சுகத்தைப் பெறுவது உறுதி.
* நெய்யினால் அபிஷேகம் செய்தால் வீடுபேறு (அடையலாம்.) பெற்றேவிடமுடியும்.
* நறுமண திருமஞ்சனப் பொடி கொண்டு அபிஷேகம் செய்துவிட்டால் கடன்- நோய் - கவலை யாவும் தீர்ந்து விடும்.
* மாம்பழச்சாறு கொண்டு அபிஷேகம் செய்தால் சந்தான பாக்யம் பெறலாம்.
* மாதுளம் பழத்தால் அபிஷேகம் செய்து வைத்தால் கோபம் நீங்கி - சாந்தம் தேடி வரும்.
* தேன் அபிஷேகம் சுகம் தரும்.
* வாழைப்பழ அபிஷேகம் பயிர் விருத்தியாகும். வேளாண்மை செழிக்கும்.
* வலம்புரி சங்கினால் அபிஷேகம் செய்து வைப்பது தீவினை நீக்கி நல்வினை நல்கும்.
* விபூதி அபிஷேகம் மோட்சம் தரும்.

இப்படியாக அபிஷேக ஆராதனை செய்தால் மேற்கண்ட பலா பலன்களைப் பெறலாம் என்று அனுபவசாலிகள் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

அபிஷேக ஆராதனை இன்பத்தை ஏற்படுத்தும்.

ஆண்டவனை ஆனந்தப்படுத்த அபிஷேகம் செய்தே பக்தர்கள் பரவசமடைந்தார்கள்.

நாமும் ஒருமுறையாவது நமது தெய்வ சக்திகளுக்கு அபிஷேகம் செய்து வைத்து, சுகம் பெறலாமே.



# அபிஷேகப் பலா பலன்கள்



திரு. எம்.எஸ். பிச்சுமணி - சென்னை.

(முன் இதழ் தொடர்ச்சி)

# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.

## கா

கார் கலந்த மேனியான் - மேகத்தோடு ஒப்பான திருமேனியையுடையவன்

கார்கொண்டு - கறுத்துக்கொண்டு; சீறிக்கொண்டு

கார்த்தல் - கருவடைந்து அரும்புதல். கருவடைந்தபிறகு ஏற்படும் நிறத்தையும் சொல்லுகிறது.

கார்த்திகை புதியதுக்குக் குளித்தான் - கார்த்திகைக்கும் குளிப்பார், புதியதுக்கும் குளிப்பார். புதியது- புதுநெல்வரும் போது மங்களமாக நீராடி இஷ்ட தேவதைக்குப் பொங்கலிட்டு உறவினர்களும் தாங்களும் உண்பர்கள். ஆகையால் கார்த்திகைக்கும புதியதுக்கும் என்கிறது.

கார் வானத்துள்ளாய் - மழைபொழியும் மேகம் போலே, திருக்கார்வானத்திலே எழுந்தருளி இருக்கிறவன். 108 திவ்ய தேசங்களுள் ஒன்று கார்வானம். இத்திருப்பதிக்குத் திருநாமம் இப்பெருமானின் தன்மையால் வந்தது. பெருமாள் திருநாமமே ஊருக்குமாயிற்று.

காரகத்தாய் - திருக்காரகம் என்னும் திவ்ய தேசத்து எம்பெருமான். 108 திருப்பதிகளுள் ஒன்று.

கார்வலயம் - கடல்

கார்முகம் - வில்

காராமை - பெரிய ஆமை

காரானை - பெரிய ஆனை

- கார் - பெருமை என்ற பொருளில் வந்தது.

காரண்டம் - நீர்க்காக்கை

காரி மாறப்பிரான் - நம்மாழ்வாருக்குத் திருநாமம். காரி என்பவருக்குப் பிறந்த மாறன் பிரபந்தங்கள் அருளியதால் பிரானனார். பிரான்



- உதவி செய்பவர்.

காரியப்பாடு - செயல்

காரியப்பாடாலே பிரியலும் - காரிய வசமாக

காரும்வார்பனி - மேகங்களும் மிக்க பனியும் காருகை - பெருகுகை

காரெள்ளினுண்டை - கறுப்பு எள்ளினால் செய்த உண்டை. எள்ளுண்டை

காரோதம் - கடல்

கால் கடியர்கள் - ஆற்றல் மிக்கவர்கள்

கால் கடுகி வந்தது - வேகமாக வந்தது.

கால் கடையிலே - காலடியிலே

கால் குலைந்து - இருப்புக்குலைந்து-

கால் - வெற்றிலைக்கொடி; வண்டி; வேர்; காற்று.

| | | |
|---|---|---|
| கால் கொள்கண்கொடி | - | வெற்றிலைக்கொடியின் காம்பு மறையும் படியாகக் கண்தோறும் திளைக்கிற கொடி. |
| கால்கட்டு | - | தடை; பந்தகம் |
| கால்கட்டுகை | - | பிரபத்தி பண்ணுகை |
| கால்தாழுகை | - | ஆழங்கால்படுகை. |
| கால்பெருத்துப் பொலி சிறுத்தாலும் அளப்பாருண்டோ | - | கால் - மரக்கால், பொலி-நெல், மரக்கால் பெரிதாய் நெல் அதற்குக் குறைவாயிருந்தால்கூட அதை அளப்பதுண்டோ |
| காப்பந்தம் | - | வெண்கலத்தில் செய்த சிறு பந்தம் |
| காரிகாதம் | - | காரியம் செய்கிறவர்; காரி-அர்ச்சகர். அவருக்கு ஏற்பட்ட சுதந்திரமான பிரசாதம். 'அவருக்கு காரியோம்' என்று அருளப்பாடு. |
| கால் கூறு | - | கால்பாகமும் பாத ப்ரமாணமும் |
| காலடி | - | உள்ளடி, உள்ளங்கால், அடிக்கால் |
| காலநான்கு | - | சதுர்யுகம்; நான்கு யுகங்கள் |
| காலபுருஷ தானம் | - | நடுவில் ஏற்படும் மரண தோஷத்தைத் தவிர்ப்பதற்குப் பரிகாரமாக யமனைத் தங்கத்திலோ வெள்ளியிலோ செய்து தானம் கொடுக்கை, அந்த தங்கத்தைக் கொண்டு குழந்தைகளுக்கு மோதிரம் செய்து போடுவர். |
| காலாள் | - | காலாட்படை |
| காலிகள் | - | பசுக்களும் கன்றுகளும் |
| காலிடைப்பாசம் | - | யமதூதர்கள் காலிலே துவக்கி இழுக்கும் பாசம்; காலி என்று காற்றாய் ஆத்மாவை வரிந்து கொண்டு கிடக்கிற நுண்ணிய சரீரம்; பெண் ஆசை |
| காலிலி | - | அருணன்; காற்று |
| காலெடுத்தல் | - | தொடங்குதல்; அநுமதித்தல் |
| காவணம் | - | பந்தல் |
| காவலம் | - | நெருப்பு |
| காவளம்பாடி | - | திருக்காவளம்பாடி. 108 திருப்பதிகளுள் ஒன்று. |
| காலி | - | கருநெய்தல் |
| காவு | - | புழக்கடை என்று அலட்சியமாகச் சொல்லுகிறபடி. |
| காழ்ப்பு | - | அழலுறுகை; வைரம் பற்றுகை; கொட்டை; ஸாரம் |
| காழிச்சீராம விண்ணகர் | - | சீர்காழி என்னும் திவ்ய தேசம் |
| காளாஞ்சி | - | வழிநடையில் பெருமாளுக்கு சமர்ப்பிக்கும் அர்க்கிய பாத்ய தீர்த்தத்தை ஏந்தும் பாத்திரம். |
| காற்கடை தலைமாடாக | - | கால்மாடு தலைமாடாக, தலை கீழாக, கீழ்மேலாக |
| காற்றவொண்ணுது | - | மீட்கப்போகாது; தடுக்கமுடியாது; காற்ற-கக்க வைக்க; காலுதல்-கக்குதல்; கக்கும்படி செய்யமுடியாத |
| காறை | - | கழுத்திலிடும் ஆபரணம் |
| கான்றெடுத்த நெறி | - | இடைவெளியறச் செறிந்த காடு; காற்றோடு தொடுத்துக்கிடக்கிற வழி |
| கான் | - | காடு; வாசனை |
| கானார கரி | - | காட்டில் புகுந்து மனிதரோடு முகம் பழகாதே இருக்கும் யானை |
| கான்று | - | உண்டாக்கி, உமிழ்ந்தது |



| | | |
|---|---|---|
| கிங்கரர் | - | ஏவுற்றுச் செய்யுமவர் |
| கிச்சன் | - | நெருப்பு |
| கிஞ்சித்கரித்தல் | - | ஏதோ பணிபுரிதல் |
| கிஞ்சுகம் | - | கிளி; சிவப்பு |
| கிட்டம் | - | பீச்சாங்கட்டி, ரத்தனத்திலுள்ள கரடு, வண்டல் |
| கிடக்கை | - | படுத்து இருக்கை; படுக்கை |
| கிடக்கிடாய் | - | கிடக்கட்டும் |
| கிடக்கிடீர் | - | கிடக்கட்டுங்க என்பது போல |
| கிடந்த நம்பி | - | சயனத்திருக்கோலம். திருக்குறுங்குடியில் ஐந்து மூர்த்திகளில் ஒரு பெருமாள். |
| கிடந்தானை கண்டேறுகை | - | படுத்திருக்கும் யானையின் மேல் பிறர் ஏற்றிவைத்து கௌரவியாமல் தானே ஏறுகை. |
| கிடாய் | - | விடாதேடா |



T.T. MUTHUPANDAL
(Kalinga Mardhanam)

*Visit....*

# SRI PADMAVATHI DEVI TEMPLE

## TIRUCHANUR



| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 a.m. | to | 5-30 a.m. | — | Suprabhatam |
| 5-30 a.m. | to | 6-00 a.m. | — | Sahasranama Archana |
| 6-00 a.m. | to | 6-30 a.m. | — | First Bell |
| 6-30 a.m. | to | 11-30 a.m. | — | SARVA DARSAN |
| 11-30 a.m. | to | 12-00 Noon | — | Suddhi & Second Bell |
| 12-00 Noon | to | 6-00 p.m. | — | SARVA DARSAN |
| 6-00 p.m. | to | 6-30 p.m. | — | Suddhi & Third Bell |
| 6-30 p.m. | to | 8-45 p.m. | — | SARVA DARSAN |
| 8-45 p.m. | to | 9-00 p.m. | — | Suddhi |
| 9-00 p.m | to | 9-30 p.m. | — | Ekantha Seva |

**ON FRIDAYS**

| | | | | |
|---|---|---|---|---|
| 9-00 a.m. | to | 10-00 a.m. | — | Abhishekam (Rs. 100/- per head) |

கிடீர் கிடிகோள் - காண்மின் கண்டீர் என்று முன்னிலை வினைச்சொல்லாக வழங்குகிறது.

கிண்கிணி - பாத சதங்கை என்று காலில் அணிவது. இடுப்பிலும் அணிவர்.

கிண்கிணி வாய்ச்செய்தல் - சதங்கை வாய்செய்தாற்போல் பாதி மலர்தல்

கிண்டி - மூக்கு வைத்த குடம் அல்லது சொம்பு

கிண்ணகம் - வெள்ளம்

கிணறுவார - தூர்வை வார; புதுப்பிக்க

கிரிசை - கார்யம்; தொழில்

கில்லாது - மாட்டாமல்

கில்லான் - வல்லமையல்லான்

கிலாம் - வேடிக்கை; ஊடல்

கிலாய்க்கை - ஊடல் போது சொல்லும் வார்த்தை

கிலாய்த்து - வெறுத்து

கிழக்கு வெளுத்தல் - போதுவிடிதல்

கிழத்தி - உரியவள்; தலைவி; உத்தம நாயகி

கிழார் கிழார் - பெரியவருக்கும் பெரியவர்; மிகப்பெரியவர்

கிழிக்குறை - நிறைவின்மை

கிழிச்சிரை - பணம் வைத்திருக்கும் துணி முடிப்பு

கிழி - பணமுடிப்பு

கிள்ளாக்கு - தெலுங்கில் இலைக்கு 'ஆகு' என்று பெயர். இங்கு கிள்ளின ஆகு- கிள்ளாக்கு. அதாவது ஸ்ரீரங்கத்தில் அதிகாரி வெற்றிலையைக் கிள்ளிக்காயப்படுத்திக் கொடுப்பர். அதைக் காட்டி கருவூலத்தில் தங்க சாமான்கள் வாங்கி பெருமாள் உற்சவத்திற்குப் பயன்படுத்தித் திருப்பிக்கொடுப்பது கோயில் வழக்கம். 'உன் அதிகாரம் கிள்ளாக்குப் பறக்கிறதோ' என்று பேச்சு வழக்கு.

கிள்ளிக்களைதல் - பிடுங்கிப்போடுதல்; சிரமமின்றி அழித்தல்

கிளரரக்கன் - தாயும் தமப்பனும் சேர இருக்க விடாதே பிரித்த மிகையையுடைய அரக்கன் - இராவணன்

கிளரிக் கிளரிப்பிதற்றும் - எடுத்தெடுத்துப் பேசும்

கிளை - சப்தம்; பந்து. ஆந்தை கிளை கூடிற்று என்பர்.

கிளைப்ப - விளையும்படியாக

கிளைஞர் - சம்பந்திகள்; மருதநிலத்தலைவர்

கிற்கின்றிலேன் - சக்தியற்றவன்

கிறி - மணிக்கட்டில் அணியும் சிறுப்பவளவடம், கங்கணம்; உபாயம்; பேறு

கின்னரம் - வீணை

கினிய - விழுங்க; வியாபிக்க. மலை கினியநின்ற பெருமாள் என்று திருவேங்கடமுடையானைச் சொல்லுவர். குனிய நின்ற என்பது பாடப்பிழை.

கீசகம் - குரங்கு; மூங்கில்; தலைப்பாகை

கீரம் - பால்; கிளி; தீபம்

கீராதே - சொல்லாதே

கீழ்க்கன்று - தம்பி; சிறியவன்

கீழ்க்கடல் மேல்கடலாய் - கிழக்கிலுள்ள நீர் மேற்கே போக, மேற்கிலுள்ள நீர் கிழக்கே வர என்றபடி

கீழ்து - கீழேயிட்டுக்கொண்டு; கிழித்து; மகிழ்ந்து. தாமரையை மரை என்று முதல் குறைத்து சொல்லுவதுபோல மகிழ்ந்து என்பது கிழ்ந்து என்று ஆகி நீட்டு வழி நீட்டலாய் கீழ்ந்து என்பது கீழ்து ஆயிற்று என்பர்.

கீழ்வயிற்றுக்கழலை - அடிவயிற்றுப் புண்

கீழாண்டைச்சிகை - பழங்கணக்குகளிலே இருக்கிற பாக்கி.

கீழூற்றைக்கும் - சென்று போனதற்கும்

கீழோலையிடுதல் - இரகசியமாக ஓலை எழுதுதல்



# சோமநாதம்

"சன்மிஷ்டை"

புற இருளைப் போக்கும் சூரிய பகவான் பன்னிரெண்டு பகுதிகளாக விளங்குகிறுன். அதுபோல, அக இருளை அகற்றுகின்ற திருமுறைகளும் பன்னிரண்டாகவே திகழ்கின்றன. துவாத சந்தப் பெருவெளியில் துரியம் கடந்த பரதாத மூலத்தலத்து முளைத்த முழு முதலை முன்னோர்கள் பன்னிரெண்டு ஸ்தலங்களில் கண்டு வழிபட்டுப் போற்றியுள்ளார்கள்.

ஜ்யோதிர்லிங்கத் தலங்களில் ஒன்றுன "சோமநாதபுரம்" சௌராஷ்டிர ராஜ்யத்தில் "கத்தியவாகர்" தீபகற்பத்தின் தென் கரையில் இருக்கிறது. இக்கோயில் முதன் முதலில் பொன்னாலும், பிறகு வெள்ளியாலும், அதன்பின் நல்ல மரத்தாலும், அதையடுத்துக் கருங்கல்லாலும் கட்டப்பட்டதென்று ஆன்றோர் கூறுவர். பலமுறை அழிக்கப்பட்டும், புதுப்பிக்கப்பட்டும் உள்ளது; சரித்திரத்தாலும் பிரசித்திபெற்றது. பழையகோயிலில் இருந்த பல சிற்பங்கள் நுண்ணிய வேலைப்பாடுகள் கொண்டவை. அதனால், அவைகள் சோமநாதபுரம் பொருட்காட்சிச் சாலையில் பத்திரப்படுத்தி வைக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பு. அவற்றை இன்றும் சென்று பார்வையிடலாம்.

சோமநாதபுரத்திற்கு நேர் கிழக்கே, 'ஹிரண்யா, வ்ரஜனி, இலங்கு, கபிலா, சரஸ்வதி' என்ற ஐந்து ஆறுகள் கலக்கின்றன. எல்லாம் ஜீவநதிகள்; எப்பொழுதும் நீர்பெருக்கு இருக்கும். இவற்றுள் இரண்டு அந்தர் வாஹினியாதலின், இது "திரிவேணி சங்கம்" என்று கூறப்படுகிறது. துவாரகா நாதனாகிய ஸ்ரீகிருஷ்ணன் வேடனால் அடிபட்டு இங்குதான் தேக வியோகமடைந்தார். இத்தேக வியோகம் திரிவேணி சங்கமத்தின் அருகே நடந்தது என இதிகாச, புராணங்கள் பேசும். மோக்ஷம் அளிக்கும் புண்ணிய க்ஷேத்திரங்கள் ஏழினுள் ஒன்றுன "துவாரகை" சோமநாதபுரத்தில் இருந்து சுமார் 275 மைல் தூரத்தில் இருக்கிறது. இங்கு போய்வர நல்ல வசதிகள் உள்ளன.

## சந்திரன் பெற்ற சாபம்

தக்ஷன தன்னுடைய இருபத்தேழு பெண்களையும் சந்திரனுக்குத் திருமணம் செய்வித்தார். எல்லாப் பெண்களிடமும் ஒரேவிதமாக அன்புடன் வாழுமாறு ஆசி கூறினான் தக்ஷன். ஆனால் சந்திரனோ, "ரோஹிணி" என்ற பெண்ணின் அழகில் கவரப்பட்டு, மற்ற மனைவிகளைப் புறக்கணித்தான். தக்ஷன் சந்திரனிடம், "நீ செய்வது சரியல்ல! மனைவியர் அனைவரிடத்திலும் அன்புடன் இரு" என புத்திமதிகள் பல சொல்லியும், சந்திரன் முன்போலவே நடந்துவந்தான். இதை முற்றிலும் அறிந்த தக்ஷன் மிக்க கோபம் அடைந்தான். சந்திரனை நோக்கி, "நீ க்ஷயத்தினால் பீடிக்கப்பட்டு துன்பமடைவாயாக!" என்று கொடிய சாபமிட்டான். சந்திரனோ நடுங்கினான்; என்ன செய்வதென்று தெரியாமல் திகைத்தான். பெரும் காற்றில் அடிபட்ட வாழையைப்போல் துவண்டான்; வியாதி உடம்பில் பற்றிக்கொண்டது.

பின் ஒருவாறு தேறி - தேவர்களை அணுகி சாபத்தை நீக்குமாறு வேண்டினான். ஆனால் தேவர்களோ பிரம்ம தேவனிடம் சென்று முறையிட்டனர். பிரம்ம தேவனோ "முன்பு ஒருமுறை சந்திரன் தன்னுடைய குருபத்தினியிடத்தில் தகாத முறையில் நடந்து கொண்டான்; இப்பொழுதோ தன் மனைவிகளிடத்தில் சரிவர நடந்து கொள்ளவில்லை; அதனால் இவ்விதத் தண்டனை வேண்டியதே" என்றுர்.

ஆனால், தேவர்களோ பிடிவாதமாகி "சந்திரன் ஒஷதிகளுக்கு, அதாவது செடிகொடிகளுக்கு ஈசன். அவன் அழிந்தால் பயிர் பச்சைகள் அழியும். சகல மக்களும் உணவின்றி அழிவர். சந்திரனுடைய அமுதமயமான கலைகளை உண்டு வாழும் தேவர்களுக்கும் கேடு உண்டாகும்" என்றனர். மனம் கசிந்த பிரம்மதேவன், "பிரபாசம் சென்று 'மிருத்யுஞ்சய' மந்திரத்தினால், சிவபெருமானை ஆராதனை செய்தால் சிவன், சந்திரனுடைய சாபத்தை நீக்குவார்" என்றுன். அவ்வாறே சந்திரன் "பிரபஞ்ச க்ஷேத்திரம்" அடைந்து, அங்கு தேவர்கள் ஏற்படுத்திய புண்ணிய தீர்த்தத்தில் நீராடி, பிரதிதினமும் மிருத்தியுஞ்ச மந்திரத்தை ஜெபித்தான். சந்திரன் பத்துக்கோடி முறை மந்திரஜெபம் செய்தமையால் மகிழ்ந்த சிவபெருமான் கூறலுற்றுர்.

## சோமநாதன் வரலாறு

"சந்திரா! நல்ல மறையாளன் இட்ட சாபத்தை முற்றிலும் நீக்க என்னால் இயலாது; ஆயினும் ஒருபக்ஷம் வரை - அதாவது பதினைந்து நாட்கள் உன்னுடைய கலைகள் குறைந்து க்ஷயமடையும். பிறகு ஒரு பக்ஷம் வரை வளரும். இவ்வாறு மாறி மாறி உண்டாகும்" என்று அருளினார். பின் தேவர்களுடைய வேண்டுகோளுக்கிரங்கி - சந்திரன் பூஜித்த இடத்தில் "சோமநாதன்" என்ற அவருடைய திருநாமத்துடன் அடியவர்களுக்கு அருள் வழங்குகிறார். சோமநாத யாத்திரை புரிபவர்கள் இங்குள்ள "நிணமுத்தேஸ்வரர்" ஆலயத்திலும் வழிபடல் வேண்டுமென்ற நியதி உள்ளது. இதனால், சோமவாரத்தில் வரும் அமாவாசையின் இரவு மிகவும் சிறப்புடையது என்பர்.

## சோம குண்டம்

தேவர்களால் சிருஷ்டிக்கப்பட்டதும், பிரதிதினமும் சந்திரன் நீராடியதுமான குளம் "சோம குண்டம்" என வழங்கப்படுகிறது. அமாவாசையன்று ஆயிரக்கணக்கான யாத்திரீகர்கள் இங்குவந்து புனித சோம குண்டத்தில் "சங்கல்பம்" செய்து நீராடுவர். இப்பழக்கம் வெகுகாலமாக இருந்து வருகிறது.

இக்கோயிலை முஸ்லீம் மன்னர்கள் இடித்து நாசம் செய்து, இங்குள்ள இலிங்கத்தை அப்புறப்படுத்திவிட்டு மசூதியாக்கி வழிபட்டுவந்தனர். ஆனால், அது விரைவில் மக்களாலேயே தகர்க்கப்பட்டுத் தரைமட்டமாக்கப்பட்டது. அங்குக் குடியிருந்த முஸ்லீம் மக்களையும் அப்புறப்படுத்தினர்.

உலகப்பிரசித்தி பெற்ற "கீர் வகை" மாடுகள் இங்கு அதிகமாக உள்ளன. அதற்கு வேண்டிய புல்வசதிகள்இங்கு நிறைய உள்ளன. அதனால் இங்கிருந்து பல கறவை மாடுகள், அழகு மிகுந்த காளை மாடுகள், பிற இடங்களுக்கு ஏற்றுமதி செய்யப் படுகின்றன. இவ்வூர் ஆலயம் உள்ள பகுதியைத் "தேவப் பட்டணம்" என்பர். இந்நகரம் நாளுக்குநாள் வியாபார ஸ்தலமாக மாறி வருகிறது என்றால் அது மிகையாகாது.

## சோமநாதம் செல்லும் வழி

பம்பாயிலிருந்து வாரத்திற்கு இருமுறை "வீரவா"லுக்கு சகல வசதிகளுடன் கூடிய "போட்" செல்லுகிறது. வீரவால் ஸ்டேஷனிலிருந்து சுமார் ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் ஆலயம் உள்ளது. விமானம் மூலம் சென்று "கெஷ்கோட்" என்னுமிடத்தில் இறங்கினால், சுமார் நாற்பது கிலோமீட்டர் தொலைவில் "பிரவாசப் பட்டினம்" உள்ளது.

தவிர, அகமதாபாத்திலிருந்து "ஜுனகாட்" வழியாகவும் செல்லலாம். பம்பாயிலிருந்து பிரிந்த "குஜராத்" சௌராஷ்டிரத்தில் உள்ளது இப்பகுதி என்பது வெள்ளிடைமலையாகும்.



## ஸ்ரீகிருஷ்ணபிரான் சங்கு ஊதியது ஏன்?

(1) சங்கு என்பது ஒலித்தத்துவம், ஓங்காரத் தத்துவம். ஊதுவதற்கு அடி வயிறான நாபி, தொண்டையென்ற கண்டம், மூக்கு வழி சுவாசம் இவை மூன்றும் இணைய வேண்டும். அப்பொழுது "ஓம்" என்ற ஓங்கார ஒலி பிறக்கும், பிரணவம் பிறக்கும். யோகம், யாகம், மூச்சு எல்லாமே சக்தியின் செயல். அதனால்தான் சங்கெடுத்து "ஓம்" என்ற பிரணவ நாதமெழுப்பி சக்தியின் துணையுடன் போரைத் தொடங்கினர் ஸ்ரீகிருஷ்ணர்.

ஆதாரம் : அம்மன் தரிசனம்.

(2) தென்னாட்டில் விநாயகப்பெருமான் கையில் மோதகம் இருக்கும். ஆனால், வட(க்கே) நாட்டில் விநாயகப்பெருமான் கையில் முள்ளங்கி இருக்கும்.

(3) திருச்செந்தூர் திருமுருகப் பெருமானின் திருக்கோயிலின் அருகில் கடற்கரையோரமாகவே இருபத்து நான்கு தீர்த்தங்கள் இருப்பதாகவும், அவை காயத்திரி மந்திரத்தின் இருபத்து நான்கு எழுத்துக்களையும் குறிப்பதாகவும் கூறப்படுகின்றது.

ஆதாரம் : --அறுபது ஆலயங்களின் அற்புத வரலாறு.

தகவல் : திரு. ஆர். மணிகண்டன் - சென்னை.

(தொடர் கட்டுரை)

# முமுட்சுப்படி

திரு. மாருதிதாஸன் - காஞ்சிபுரம்.

**மூலம் : 231**

"அவனுடைய ஸ்வீகாரமே ரக்ஷகம்".

1) சேதனனுக்கு இரட்சகந்தான் யாது?

சேதனனைப் பாதுகாத்தற்கு உரியவனான பெருமான், "இவனை நாம் காப்பாற்றக் கடமைப்பட்டுள்ளோம்" என்று அன்பு காட்டுகிற பற்றுதலே இவனுக்கு உண்மையான இரட்சகமாகும்.

**மூலம் : 232**

(1) "மற்றை உபாயங்களுக்கு நிவ்ருத்தி தோஷம். (2) இதுக்கு ப்ரவ்ருத்தி தோஷம்."

1) மற்ற உபாயங்கட்கும், பெருமானாகிற உபாயத்திற்கும் உள்ள ஏற்றத்தாழ்வை விளக்குக.

கன்ம ஞான பக்திகளாகிற மற்றைய உபாயங்கள் சேதனன் முயற்சியாலேயே கைகூட வேண்டியுள்ளது. எனவே, அவற்றிற்கு இவன் முயற்சி செய்யாதிருத்தல் குற்றமாகும்.

பெருமானாகிற உபாயம் மற்றவருடைய சிறு உதவியையும் எதிர்பார்க்க வேண்டியதில்லை. எனவே பெருமானாகிற உபாயத்தைப்பற்றின சேதனன், முயற்சியைத் தான் மேற்கொள்ளுதல் என்பது குற்றமேயாகும்.

**மூலம் : 233**

"சிற்ற வேண்டா."

1) சேதனன் ஒரு செயலும் செய்தல் வேண்டாம் என்பதனை விளக்குக.

பெருமானாகிற உபாயத்தைப் பற்றுகிறவன் எந்த ஒரு செயலும் செய்தல் வேண்டாம். இக்கருத்தைச் "சிற்ற வேண்டா" என்னும் ஆழ்வார் திருவாக்கால் அறியலாம்.

"மற்றொன் றில்லை சுருங்கச்
சொன்னோம்



மாநிலத் தெவ்வு மிர்க்கும்
சிற்ற வேண்டா சிந்திப்பே அமையும்"

என்பது ஆழ்வார் திருவாக்கு. இவ்வுலகில் வாழும் எத்த கையோரும் செயல்கள் பல வற்றை மேற்கொண்டு தளர்ச்சி யடைய வேண்டுவதில்லை. எம் பெருமானைச் சிந்தித்திருந்தால் அதுவே போதும் என்கிறார் ஆழ்வார்.
(சிற்ற வேண்டா = தளர்ச்சி அடைய வேண்டா)

## மூலம் : 234

"நிவ்ருத்தி கீழே சொல்லிற்று."

1) இந்தச் சரம சுலோகத்தில் இக்கருத்து உள்ளதா?

ஆம். உள்ளது. பெருமானைப் பற்றி நிற்கும் சேதனன் வேறு முயற்சிகளை மேற்கொள்வதை அறவே விட வேண்டும் என்பது "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய" என்பதில் கூறப்பட்டுள்ளது.

## மூலம் : 235

"உபகார ஸ்ம்ருதியும் சைதந்யத்தாலே வந்தது, உபாயத்தில் அந்தர்ப்பவியாது."

1) பெருமானுக்குச் சேதனன் செய்யும் நன்றி அறிதல் உபாயத்தில் சேராதா? - விளக்குக.

சேராது. சேதனன் ஞானம் ய்க்கப்பெற்றவன். பெரு ன் தனக்குச் செய்த உத ளை நினைக்கச் செய்வது ந்த ஞானத்தின் செயலே! சேத ன் காட்டும் நன்றி அறித லேயே பெருமான் இங்ங ் செய்கிறான் என்பதில்லை. ாவே, இது உபாயத்தில் ராது.

2) 219 முதல் 235 வரையுள்ள மூலங்களில் காணப்படும் கருத்துக்களைத் தொகுத்து வரைக.

"ஏகம் என்னும் சொல் பிரிநிலை ஏகாரத்தின் பொருளைக் காட்டுகிறது. பிரிநிலை ஏகாரத்தின் பொருளைக் காட்டுகின்ற வாக்கியங்கள் சான்றுக்குப் பல உள. சேதனன் பற்றும் பற்றுதல் உபாயமன்று. இப்பற்றுதலும் பகவானாலேயே வந்தது. இது பகவான் செய்த க்ருஷியின் பயனே! இதற்கு ஆழ்வார் திருவாக்கே பிரமாணம். இப்பற்றுதலை உபாயமென எண்ணக்கடவன் அல்லன்! இங்ஙனம் எண்ணின் குற்றமே நேரும். இப்பற்றுதலுக்குப் பயன்கள் சில உள. இப்பதத்திலும் சாரமாக அறியப்படும் கருத்துக்கள் பல உள. பகவானைச் சேதனன் பற்றும் பற்று தீமையுடையது. பகவான் வந்து இவனை அங்கீகரித்தலே இரட்சகம். மற்ற உபாயங்களுக்கும் பிரபத்தி உபாயத்திற்கும் முறையே முயற்சியை விட்டிருத்தலும் முயற்சியை மேற்கொள்ளுதலும் குற்றம்.

இதை ஆழ்வார் பாசுரம் நன்கு விளக்குகிறது. இது "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய" என்பதில் சொல்லப்பட்டுள்ளது. ஞானத்தினால் ஏற்பட்ட நன்றி பாராட்டல் உபாயத்தில் சேராது" ஆகிய கருத்துக்கள் 219 முதல் 235 வரையுள்ள மூலங்களின் கருத்துக்களாம்.

## மூலம் : 236

"சரணம் - உபாயமாக."

1) சரணம் என்பதன் பொருள் யாது?

சரணம் என்பதற்கு உபாயம் என்பது பொருளாகும்.

## மூலம் : 237

"இந்த சரண சப்தம், ரக்ஷிதாவையும், க்ருஹத்தையும், உபாயத்தையும் காட்டக் கடவதேயாகிலும், இவ்விடத்தில் உபாயத்தையே காட்டுகிறது. கீழோடே சேர வேண்டுகையாலே."

1) சரணம் என்னும் பதம் இங்கு உபாயத்தையே காட்டும் என்பதற்கான காரணம் யாது?

இந்தச் சரணம் என்னும் சப்தம் இரட்சிக்கின்றவனையும், வீட்டையும், உபாயத்தையும் தெரிவிக்கிறது. ஆயினும், இங்கு உபாயத்தையே காட்டுகிறது.

அவ்வாறு உபாயம் என்னும் பொருளைக் கொடுத்தால்தான் இது எல்லாத் தருமங்களையும் விட்டுத் தன்னையே பற்றச் சொல்லுகின்ற இப்பகுதிக்குப் பொருத்தமாக அமையும்.

## மூலம் : 238

"வ்ரஜ - புத்தி பண்ணு."

'வ்ரஜ' என்பதற்குப் 'புத்தி பண்ணு' - மனத்தால் உறுதியாகப் பற்று என்பது பொருளாகும்.

'வ்ரஜ' என்பது, "ஸர்வ தர்மாந், பரித்யஜ்ய, மாம், ஏகம், சரணம், வ்ரஜ" என்பதில் அமைந்துள்ள ஆறுவது சொல்லாகும்.

## மூலம் : 239

"கத்யர்த்தமாவது புத்யர்த்தமாய் அத்யவஸி என்றபடி."

1) 'புத்தி பண்ணு' என்பதற்கு விளக்கம் தருக.

'வ்ரஜ்' என்னும் வினைச்சொல் "வ்ரஜகதௌ" என்னும் அடிச் சொல்லிலிருந்து உண்டானது என்று சொல்லுவர்.

இங்கு 'வ்ரஜ்' என்னும் வினைச்சொல்லுக்கு "மனத்தால் உபாயமாகப் பற்று" என்பதே பொருளாகும்.

மூலம் : 240

"வாசிக காயிகங்களும் இதுக்கு அபேக்ஷிதங்களாய் இருக்கச் செய்தேயும், ஜ்ஞாநாத் மோக்ஷமாகையாலே மாநஸமான அநுஷ்டாநத்தைச் சொல்லுகிறது."

1) மனத்தால் பற்ற வேண்டும் என்று மட்டும் சொல்லுவதன் காரணம் யாது.?

பற்று என்னும் சொல் மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்று கரணங்களினாலும் பெருமானைப் பற்றுதல் வேண்டும் என்னும் பொருளைத் தந்து நிற்கும். ஆயினும் மனத்தால் பற்றுதல் வேண்டும் என்பதே இங்குச் சிறந் பொருளாகக் கொள்ளத்தக்கது.

உபாயப் பொருளான எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்யும் சேதனன் தகுதியுடையவனாய் இருத்தல் வேண்டும். மனம், வாக்கு, காயங்களினால் பெருமானைப் பற்றும் பற்றுதலே இவனுக்கு அமைய வேண்டிய தகுதியாகும். இம் மூன்றும் சேதனனுக்கு வேண்டியிருப்பினும், ஞானத்தாலேயே மோட்சம் என்று சாத்திரங்கள் கூறுவதால் இங்கு மனத்தால் பற்றும் பற்றுதலையே ஆசிரியர் வலியுறுத்துகிறார்.

மூலம் : 241

"ஆக,
த்யாஜ்யத்தைச் சொல்லி, த்யாக ப்ரகாரத்தைச் சொல்லி, பற்றப்படும் உபாயத்தைச் சொல்லி, உபாயநைரபேக்ஷ்யஞ் சொல்லி, உபாயத்வஞ் சொல்லி, உபாய ஸ்வாகாரம் சொல்லுகிறது."

1) "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ" என்னும் கூற்றில் காணப்படும் பொருளைத் தொகுத்து வரைக.

'ஸர்வ தர்மாந்' என்பது விட வேண்டியவற்றையும், 'பரித்யஜ்ய' என்பது விடும் முறையையும், 'மாம்' என்பது பற்றப்படும் உபாயத்தையும், 'ஏகம்' என்பது இவ்வுபாயம் வேறொன்றையும் பொருந்தாமையையும், 'சரணம்' என்பது உபாயத் தன்மையையும், 'வரஜ' என்பது பற்றுதலையும் சொல்லுகிறது.

(தொடரும்)



## சிவபெருமான்

நாம் எப்படி வாழவேண்டும் என்பதைக் காட்டுவதே சிவ சொரூபம்.

ஜடாமுடியில் சிவபெருமான் வைத்திருக்கும் சந்திரன நம்முடைய இன்பமும் துன்பமும் மாறிமாறி வளர்பிறையாகவும் தேய்பிறையாகவும் வரும் என்பதைக் காட்டுகிறது.

அங்கே இருக்கும் கங்கை என்றும் எப்போதும் நம நம் மனதைக் கங்கைபோல வைத்திருக்க வேண்டும் என்று உணரத்துகிறது. கங்கையில் எவ்வளவோ அழுக்கும் அசுத்தமும் சேருகின்றன. ஆனால் அதன் தூய்மை ஒருபோதும் கெடுவதில்லை. அதைப்போல எவ்வளவோ ஆசாபாசங்கள் நம்மை அலைக்கழித்தாலும் நம்முடைய மனம் அதனால் கெட்டுப் போய்விடக்கூடாது.

ஒவ்வொரு நிமிடமும் நம்மைப பாவக்குழியில் தள்ள நச்சுப் பாம்பாக சூழ்நிலை சுற்றிக்கொணடு காத்திருக்கிறது. ஆனால் அந்த விஷம் உள்ளே இறங்க நாம் விட்டுவிடக்கூடாது. இதையே கழுத்தைச் சுறறிய பாம்புடன் விளங்கும் சிவபெருமான் விஷத்தைக் கண்டத்தில் தேக்கிக் காடடுகிறார்.

மிருக உணர்ச்சிகள் நம்மைப் பாதிக்கலாம். ஆனால அவற்றிலிருந்து நீங்கிய உயரந்த மனித உணரவுடன நாம் வாழவேண்டும். புலித்தோல் போர்ததிய பெருமான் அதையே நமக்குக் காட்டுகிறார்.

உடம்பின் ஒரு பகுதியில் தேவியை வைத்துக்கொண்டிருந்தாலும் சிவபெருமான் காமத்தை வென்றவர்; காமனையே எரித்தவர். அதைப் போல நாமும் உலகியலைப்பற்றி வாழந்தாலும் காமததுக்கு அடிமையாகாமல் அதைத்தூய்மைபபடுததி ஆன்மீகமாக வாழப் பழகிக்கொளள வேண்டும.

---இந்து மதச சிந்தனை

--கமலா மாரியப்பன் - கோவை.

# "பவிஷ்யதாசாரிய விக்ரஹம்"

திரு. ஜி. இலட்சுமணன் - சேடப்பாளையம்.

ஸ்ரீ வைஷ்ணவ மதம் ஸ்ரீமந் நாராயணனை முதல் ஆசாரியராகக் கொண்டு, ஸ்ரீமந் நாதமுனிகளையும் ஸ்ரீஆளந்தாரையும் மத்தியமாகக் கொண்டு, இன்று உள்ள நம் ஆசாரியர் வரை வளர்ந்து வருகின்ற வைதிக மதமாகும்.

இந்த குருபரம்பரையில் நடு நாயகமாய்த் திகழ்பவர் ஸ்ரீமத் ராமாநுஜர் ஆவார். இவர் இம் மதத்திற்குச் செய்த தொண்டை நினைத்து ஸ்ரீரங்கநாதனே 'எம் பெருமானார் மதம்' (அ) 'எம் பெருமானார் தரிசனம்' என்று இதற்குப் பெயர் சூட்டினான்.

இவ்விஷயத்தை மாமுனிகள் உபதேசரத்தின மாலையில் குறிப்பிடும் போது,

" 'எம்பெருமானார் தரிசனம்'
என்றே இதற்கு
நம் பெருமாள் பேரிட்டு நாட்டி
வைத்தார் அம்புவியோர்
இந்தத் தரிசனத்தை
எம்பெருமானார் வளர்த்த
அந்தச் செயல் அறிகைக்கா."

இப்படிப்பட்ட ராமாநுஜர் இந்த நிலவுலகில் அவதரிப்பதற்கு முன்பே அவருடைய அர்ச்சாதிருமேனி உண்டாகிவிட்டது. இப்படி எதிர்காலத்தில் அவதரிக்கப்போகிற ஆசாரிய விக்ரஹம் முன்பே தோன்றியதால் இதற்கு 'பவிஷ்ய தா சாரிய விக்ரஹம்' என்று பெயர் உண்டாயிற்று.

(பவிஷ்யத் = எதிர்காலத்தில்
ஆசாரியர் = குருவினுடைய
விக்ரஹம் = அர்ச்சா திருமேனி)

இந்த பவிஷ்யதாசாரிய விக்ரஹம் இரண்டு உண்டாயிற்று என்பர். முதலில் ஸ்ரீமதுரகவியாழ்வார் காலத்தில் தோன்றியது, மற்ளென்று ஸ்ரீமந்நாதமுனிகள் காலத்தில் தோன்றியது என்பர்.

## முதல் பவிஷ்யதாசாரிய விக்ரஹம் உண்டான பிரபாவம் :-

ஸ்ரீ மதுரகவியாழ்வார் தன் ஆசாரியரான நம்மாழ்வார் விக்ரஹத்தை பிரதிஷ்டை செய்ய வேண்டும் என்று நினைத்து, ஆழ்வார் முன் தண்டம் ஸமர்ப்பித்து ஆர்வம் பெருக விண்ணப்பித்தார்.

அதற்கு ஆழ்வார் நியமனம் கிடைத்தது. அந்த நியமனத்தினை சிரஸா வகித்து விக்ரஹம் செய்ய திருவுள்ளம் கொண்டார். ஓர் சிற்பியை அழைத்து வந்து, ஆழ்வாரைத் தரிசனம் பண்ண வைத்து அதையே தியானித்துக்கொண்டு இவரைப்போல் அர்ச்சா திருமேனி வடிக்க வேண்டும் என்றார்.

அந்தச் சிற்பியும் அவ்வாறே தியானம் கொண்டு தாம்பரபரணி தீர்த்தத்தை எடுத்து காய்ச்சி விக்ரஹம் வடித்தார். ஆனால் அவரைப் போல் இல்லை. வேறு ஒரு உருவம் வந்தது.

இந்த விக்ரஹத்தை எடுத்துக் கொண்டு போய் ஆழ்வாரிடம் ஸமர்ப்பிக்க ஆழ்வார் மிக உகந்து 'இப்படிப்பட்ட ஒரு மஹானான 'ஸ்ரீராமாநுஜர்' அவதரிக்கப்போகிறார். இதுவே பவிஷ்யதாசாரிய விக்ரஹம் ஆகும். இதையே உபாய உபேயமாக நினைத்து இருங்கள்' என்றார்.

மறுபடியும் மதுரகவியாழ்வார், நம்மாழ்வார் திருவடிகளில் விழுந்து வணங்கி, "தங்களைப் போல் ஒரு விக்ரஹம் வேண்டும்" என்று கூற ஆழ்வார் திருவுள்ளம் உகந்து அவ்வாறே செய்யும் என்று கூற, மதுரகவிகள் அதே சிற்பியைக் கொண்டு தாம்ரபரணி தீர்த்தத்தை எடுத்துக் காய்ச்சி விக்ரஹம் ஊற்ற அதன்பின் ஆழ்வார் விக்ரஹம் கிடைக்கப்பெற்றது.

ஆழ்வார் விக்ரஹம் அவதரிப்பதற்கு முன்பே ஸ்ரீராமாநுஜர் விக்ரஹம் முதலில் தோன்றியதால் 'ஆழ்வாருக்கு அண்ணன்' என்ற சிறப்புப் பெயர் பெற்றார்.

மதுரகவிகள், பவிஷ்யதாசாரிய விக்ரஹகத்தையும் ஆழ்வார் விக்ரஹத்தையும் எடுத்துக்கொண்டு ஆழ்வார் திருநகரியிலுள்ள திருப்புளியாழ்வார் அடியில் எழுந்தருளப்பண்ணி, இதற்கு நித்யமான உற்சவம், மாத உற்சவம், வருஷ உற்சவங்களை நடத்திக் கொண்டு வந்தார்.

அனேக காலம் சென்ற பின் ஆழ்வார்திருநகரி காடாக மாறி விட்டது. திருப்புளியாழ்வாரும் பவிஷ்யதாசாரிய விக்ரஹமும், ஆழ்வார் விக்ரஹமும்,

பொலிந்த பிரானும் காட்டுக்குள் மறைந்து வாழ்ந்து வந்தனர்.

அப்பொழுது மணவாள மாமுனிகளின் ஆசாரியரான திருவாய்மொழிப்பிள்ளை அந்நகரை காடு வெட்டி நாடாக மாற்றும் போது, அவர் கனவில் எம்பெருமானார் தோன்றி, தாம் மதுரகவியாழ்வார் நியமனத்தாலும், ஆழ்வார் க்ருபையாலும் தாம்ர பரணியில் தோன்றிய வரலாற்றைக் காட்டினார்."

மறுநாள் காலையில் கனவில் கண்ட இடத்திற்குச் சென்று அதேப்போல் பவிஷ்யதாசாரிய விக்ரஹத்தைக் கண்டு எடுத்தார்.

அதை கொண்டு வந்து ஸ்ரீராமாநுஜ சதுர்வேதி மங்கலம் என்ற ஊரை உண்டாக்கி நான்கு வீதிகளிலும் நான்கு வேதம் ஓதும் அந்தணர்களைக் குடியேற்றி வைத்து அவர் சந்நிதிக்கு முன்பாகவே, தனக்கு ஒரு திருமாளிகை அமைத்துக் கொண்டு ஆழ்வார் திருநகரியில் வாழ்ந்தார்.

இப்படி மதுரகவியாழ்வாரால் உண்டாக்கப்பெற்ற பவிஷ்யதாசாரிய விக்ரஹம் திருநெல்வேலியில் ஆழ்வார் திருநகரிக்குள் உள்ள ஸ்ரீராமாநுஜ சதுர்வேதி மங்கலத்தில் இன்றும் காட்சி அளித்துக்கொண்டு இருக்கிறுர்.

இந்த வைபவத்திற்கு ப்ரமாண நூல்கள் :-

(1) கடிந பத தீபிகை.

(2) திருக் குருகூர் வாஸியான தேவராஜ பாரதி இயற்றிய சடகோப திவ்ய சரிதத்தில் 162வது பக்கத்தில் உள்ள திருவர்ச்சைப் படலப் பாட்டுக்கள்.

(3) 'ஸ்ரீசைலார்ய வைபவம்' என்னும் புராதந க்ரந்தம். இவ் வடமொழி நூல் ஆழ்வார்திருநகரி ஸ்ரீஎம்பெருமானார் ஜீயர் ஸ்வாமி மடத்தில் நாகர எழுத்தில் அச்சிடப்பட்டு இருக்கிறது.

## இரண்டாவதாக பவிஷ்யதாசார்ய விக்ரஹம் உண்டான பிரபாவம் :-

காட்டுமன்னார்குடியில் அவதரித்த ஸ்ரீமந்நாதமுனிகள் திருவாய்மொழி ஆயிரமும் பெற வேண்டும் என்று நினைத்து ஆழ்வார்திருநகரி சென்றுர். அங்கு விசாரித்ததில் அந்த ப்ரபந்தம் யாருக்கும் வராது என்று அறிந்து கொண்டு வியாகூலப் பட்டார்.

அதன் பிறகு ஒரு முடிவிற்கு வந்தார். மதுரகவியாழ்வார் சம்பந்தம் பெற்ற பராங்குச தாசர் என்பவரிடம் 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' என்ற ப்ரபந்தத்தை உபதேசிக்கப் பெற்று அதை நம்மாழ்வார் திருமுன்பு பத்மாசனத்தில் அமர்ந்து 12000 தடவை உருபோட்டு ஜபித்தார். அதன் பின் நம்மாழ்வார் ப்ரத்யக்ஷமானார்.

நம்மாழ்வார் நாதமுனிகளைப் பார்த்து, "நாதமுனிகளே! எம்மைச் சுற்றி ஒரு திரையால் மறைத்துவிட்டு என் எதிரே அமர்ந்து கொண்டு நாம் அருளிய ப்ரபந்தத்தை கேளும் என்றுர்."

அவ்வாறே நாதமுனிகள் ஏடும் எழுத்தாணிகொண்டு அருளிச்செயலை எழுதிக்கொண்டு வந்தார்.

அப்பொழுது திருவாய்மொழி ஐந்தாம் பத்து இரண்டாம் திருவாய்மொழி முதல்பதிகமான,

**"பொலிக பொலிக பொலிக!**
**போயிற்று வல்லுயிர்ச் சாபம்**
**நலியும் நரகமும் நைந்த நமனுக்கு**
**இங்கு யாது ஒன்றுமில்லை**
**கலியும் கெடும் கண்டுகொண்மின்**
**கடல்வண்ணன் பூதங்கள்மண்மேல்**
**மலியப் புகுந்து இசைபாடி ஆடி உழி**
**தரக் கண்டோம்"**

இப்பாடல் வந்தவாறே ஆழ்வார் நாதமுனிகளைப் பார்த்து "கண்டு கொண்மின்", "கண்டு கொண்மின்", "கண்டுகொண்மின்", "கலியும் கெடும் கண்டு கொண்மின்" என்று ஆர்த்தி தோற்ற சொன்ன உடனே நாதமுனிகள் தண்டம் ஸமர்ப்பித்து இதற்கு விளக்கம் கேட்க, அதற்கு ஆழ்வார், "இந்த ப்ரபன்ன குலத்திலே ஒரு மஹான் அவதரிக்கப்போகிறுர். அவராலே கலியும் கெடும், கண்டு கொண்மின்" என்றுர்.

உடனே நாதமுனிகள் 'பயனன்றாகிலும்' என்ற பாட்டை இயலும் இசையுமாக ஏறிட்டு ஆழ்வாரைப் பாடி உகப்பித்து, தேவரீர் அடியேனுக்கு அந்த 'பவிஷ்யதாசார்யரை'க் காட்டி அருளவேண்டும் என்று விண்ணப்பித்தார்.

அன்று இரவு நாதமுனிகள் கனவில் ஆழ்வார் எழுந்தருளி பவிஷ்யதாசார்யரான (ஸ்ரீராமாநுஜர்) திருமேனியை காட்டிக் கொடுக்க 'அதைக் கண்டு மிகவும் மகிழ்ந்து தண்டம் ஸமர்பித்து, இதை நித்யமாக அனுபவிக்க, தேவரீர் திருவுள்ளம் பற்றவேண்டும்' என்று கூற, 'அவ்வாறே செய்கிறோம். விடியற்காலையில் ஒரு சிற்பியை அழைத்துக்கொண்டு நம் திருபுளிய மரத்தின் கீழ் வாரும்' என்று கூறி நம்மாழ்வார் மறைந்தார்.

அவ்வாறே நாதமுனிகள் சிற்பியை அழைத்துக்கொண்டு புளிய மரத்தின் அடியில் சென்றார்.

ஆழ்வார், சிற்பிக்கு யோக தசையில் எம்பெருமானாரை காட்டி, இதைப்போல் விக்ரஹத்தைச் செய்யச் சொன்னார்.

அச்சிற்பியும் சரீர சோதனை பூர்வமாக ஆஹாரநித்ரையின்றிக்கே, அவ்விக்ரஹத்தை சமைத்து ஆழ்வார் கையில் கொடுத்தான்.

ஆழ்வார் அதை வாங்கித் தன் திருக்கண்களால் குளிர கடாக்ஷித்து அதில் ஒரு சக்தி விசேஷத்தை உண்டாக்கி 'இதோ தலைக்காட்டினோம்' என்று கூறி பவிஷ்ய தாசார்ய விக்ரஹத்தைக் கொடுத்தார்.

நாதமுனிகள் அதை பெற்றுக் கொண்டு காட்டுமன்னார் எழுந்தருளி, தன் சீடர்களுக்கு ஆழ்வார் க்ருபையை பற்றி எடுத்துக்கூறினார்.

நாதமுனிகள் இந்த பவிஷ்ய தாசார்ய விக்ரஹத்தை யாருக்கும் தெரியாமல் மிகவும் குஹ்யமாகவும் பவித்திரமாகவும் காப்பாற்றிக்கொண்டு வந்தார்.

நாதமுனிகளுக்கு அந்திம காலம் வந்து விடவே, அந்தச் சமயத்தில் தம்முடைய முதல் சீடரான உய்யக்கொண்டாரை அழைப்பித்து, மற்றைய அனைவரையும் வெளியே அனுப்பி விட்டு நாதமுனிகளும் உய்யக்கொண்டாரும் ஏகாந்தமாக இருந்து கொண்டு அருளிச்செய்கிறார்.

'பவிஷ்ய தாசார்ய விக்ரஹத்தை' காட்டி 'இதை ஒருவருக்கும் வெளியிடாதே, அந்தரங்கமாக அநுபவித்துக்கொண்டு போரும்' என்று கூறி, சத்தியம் செய்து தரவேண்டும் என்று கூறி, சத்தியம் பெற்றுக்கொண்ட பின் அவருக்கு அதை பிரசாதித்தார்.

இதை உய்யக்கொண்டார் தன் வாழ்நாள் முழுவதும் பேணி பாதுகாத்துக் கொண்டு வந்தார். அவருக்கும் அந்திம காலம் வந்த உடன் தன் முதல் சீடரான மணற்கால்நம்பியை அழைத்து, அடியேன் நாதமுனிகளுக்கு செய்த சத்தியம் போலே செய்து தரவேண்டும் என்று கூறி, இந்த பவிஷ்ய தாசார்ய விக்ரஹத்தைக் காட்டிக் கொடுத்தார்.

பின்பு மணற்கால் நம்பி தன் வாழ்நாள் முழுவதும் மிகவும் ரகஸியமாக வைத்து அநுபவித்துக் கொண்டு வந்தார். பின்பு நாதமுனிகளின் பேரனான ஸ்ரீஆளந்தார் அவதரித்த பின் அவருக்குத் தக்க ஞானம் உணடான காலத்தில் உன் பாட்டனார் சேர்த்து வைத்த பொக்கிஷம் உள்ளது அதை பெற்றுக்கொள்ள வேண்டும் என்று கூறி, தக்க காலத்தில் தக்க சமயத்தில் அவரிடம் சூழரவு (சதநியம்) பெற்று, பவிஷ்யதாசாரிய விக்ரஹத்தை கொடுத்து, 'இந்த மஹாநுபாவரை பார்க்கும் பாக்கியம் உனக்குக் கிட்டும். தேவரீர் பாட்டனாரான ஸ்ரீநாதமுனிகளின் திருவுள்ளம்' என்று கூறினார்.

அவ்வாறே ஆளவந்தார் தான் பெற்ற பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தை மிகவும் ரகசியமாக பாதுகாத்துக் கொண்டு இம்மஹானை எப்பொழுது தரிசிக்கப் போகிறேம் என்று நினைத்து நினைத்து வாழ்நாள் முழுவதும் கழித்து வந்தார்.

ஒருநாள் ஆளவந்தார் காஞ்சிபுரம் எழுந்தருளினார். . அவ்வமயம் திருக்கச்சி நம்பிகளும் ஆளவந்தாரும் தேவராஜப்பெருமாள் சந்நிதியில் சந்தித்தனர். ஆளவந்தார் நம்பியைப் பார்த்து, இந்த ஸ்ரீவைஷ்ணவ மதத்தை யார் வளர்க்க போகிறுர்களோ? என்று வருந்தியிருக்கும் சமயத்தில், யாதவ பிரகாசர் தன் சீடர்களுடன் காஞ்சிக்கு வந்து தேவராஜப்பெருமாளை ஸேவிக்க வந்தார்கள். அப்பொழுது திருக்கச்சி நம்பிகள் ஆளந்தாரைப் பார்த்து, யாதவ பிரகாசர் கூட்டத்திலே மிகவும் உயரமாகவும், அஜாநுபாகுவாக, தேஜோஸ்வரூபமான ராமாநுஜரை காட்ட, அப்பொழுது ஆளந்தார் அவரைப் பார்த்தார். தன்னுடைய பவிஷ்ய தாசார்ய விக்ரக திருமுக மண்டலமும், இவரும் ஒத்து இருந்ததால் "ஆம் முதல்வன்" என்று கடாக்ஷித்து இவரே நம் தரிசன பிரவர்த்தகர் என்று குளிர கடாக்ஷித்து தேவப் பெருமாளிடம் பிரபத்தி பண்ணிக் கொண்டு ஸ்ரீரங்கம் சென்று விட்டார்.

ஆளவந்தாருக்கு அந்திம காலம் வந்த உடன் திருக்கோட்டியூர் நம்பிகளை அழைத்து சூழரவு கொண்டு பவிஷ்யதாசாரிய விக்ரஹத்தை காட்டிக் கொடுத்தார்.

திருக்கோட்டியூர் நம்பிகள் தன் அந்திம தசையில் தன் திருக்குமாரத்தியான தேவகி பிராட்டிக்குக் கொடுத்து பாதுகாத்து வரும்படி கூறினார்.

இராமாநுஜரின் சீடரான கிடாம்பியாச்சான் தேவகி

பிராட்டியிடம் சென்று பலகாலம் அனுவர்த்தித்து பவிஷ்ய தாசாரிய விக்ரஹத்தைப் பெற்றூர்.

இவரிடமிருந்து, எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை. பெரியவாச்சான்பிள்ளை, வடக்கு திருவீதிப்பிள்ளை, பிள்ளை லோகாச்சாரியார், கூர குலோத்தம தாஸர், திருவாய்மொழிப் பிள்ளை வரை மிகவும் குஹ்யமாகவும், போக்கியமாகவும் இருந்த பவிஷ்யதாசாரிய விக்ரஹம், கடைசியில் திருவாய்மொழிப் பிள்ளையின் மூலம் மணவாள மாமுனிகளுக்குக் கிடைக்கப்பெற்றது. இதை மாமுனிகள் மிகவும் ஆதரித்து பரம போக்கியமாய் ஆராதித்து வந்தார்.

இந்த பவிஷ்யதாசாரிய விக்ரஹத்தை இன்றும் ஸ்ரீரங்கத்தில் மணவாள மாமுனிகள் சந்நதியில் கண்டுகளிக்கலாம்.

### இரண்டாவது பவிஷ்ய-தாசார்ய விக்ரஹத்திற்கு பிரமாணம்.

(1) பரம காருணிகரான பெரிய வாச்சான் பிள்ளையின் திருக்குமாரரான நாயினாராச்சான் பிள்ளை அருளிய சரமோபாய நிர்ணயம்.

(2) கடிநபத தீபிகையில் 28வது பக்கத்தில் எடுக்கப்பட்ட ராமாநுஜசார்ய சரித ஸ்ரீசூக்திகள்.

(3) ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் ஸ்ரீ உவே. எஸ். கிருஷ்ணசாமி ஐய்யங்கார் புத்தூர் அக்ரஹாரம் திருச்சி, அவர்கள் தன் ஆய்வு நூலில் சரமோபாய நிர்ணயப்படி திருக்கோட்டியூரில் எழுந்தருளியுள்ள ராமாநுஜரே என்று காட்டியுள்ளார்.

ஸ்ரீவைஷ்ணவர்களாகிய நாம், நம்மாழ்வாரின் க்ருபையால் உண்டாக்கப்பெற்று, ஓராண் வழியாக ஆசாரியர்களால் திருவாராதனம் செய்யப்பெற்ற பவிஷ்யதாசாரிய விக்ரஹத்தை ஒவ்வொருவரும சென்று ஸேவித்து பிறவிப்பயனை பெறுவோமாக.



## ஹிந்து

உலக சமயங்களிலே ஆதியானது, அந்தம் அற்றது, அனைவர்க்கும் சொந்தமானது இந்து சமயம். இது காலத்தால் முந்தியது. கருணையால் உயர்ந்தது. ஹிந்து என்றாலே அதன் பொருள் மிகப்மிகப் புனிதமானது. ஹிம்+து = ஹிந்து. ஹிம் என்றால் ஹிம்சை. து- என்றால் நிவர்த்திப்பது. பிறருடைய ஹிம்சை கண்டு இன்னல் கண்டு, துன்பம் கண்டு அதனை எவன் நீக்குகிறனோ அவன்தான் உண்மையான ஹிந்து. அவன்தான் உலகத்தின் பந்து. அவன்தான் உலகிற்கே உறவினன். உலக நலன் நாடி வாழ்ந்தவர் இராமானுஜர். அவரைத்தேடி அவருக்குத் தெரிந்த ஒருவர் சென்றூர். சென்றவர் "இராமானுஜரே! காயம்பட்ட புண்பட்ட ஒருவனைக் கண்டால் நீர் வருந்துவீரா?"

"காயம்பட்ட ஒருவனைக் கண்டால் நான் வருந்தமாட்டேன்"

காயம்பட்ட - புண்பட்ட ஒருவனைக்கண்டால் நீர் வேதனைப்படமாட்டீரா?"

"நான் வேதனைப்படமாட்டேன்"

"காயம் பட்ட - புண்பட்ட ஒருவனைக் கண்டால் நீர் இரக்கப்படமாட்டீரா?"

"நான் இரக்கப்படமாட்டேன்"

"ஓய் இராமானுஜரே! நீரா பெரிய ஸ்ரீவைஷ்ணவர்? நீரா பெரிய இரக்கத்தின் இருப்பிடம்" என்றூர். அதற்கு இராமானுஜர் "காயம்பட்ட புண்பட்ட ஒருவனைக் கண்டால் நான் வருத்தப்படமாட்டேன். வேதனைப்படமாட்டேன். இரக்கப்படமாட்டேன். ஆனால் அந்தக்காயம்பட்டவனாகவே நான் ஆகிவிடுவேன்" என்றூராம்.

இந்த உள்ளமும் உணர்வும் கொண்டதுதான் இந்து சமயம். இக்கருத்தையே கீழ்வரும் வரிகள் உணர்த்தும்.

"அறிவினால் ஆவதுண்டோ பிரிதின் நோய்
தன்னோய் போல் போற்ருக்கடை"

—கமலா மாரியப்பன் - கோவை.



# உயிர்

புலவர் சோமசுந்தரப்பெருமாள் - தங்கவயல்.

உலகில் உற்பவித்த அனைத்துப் பொருள்களும் ஏதாவது பிரிதொன்றை மூலமாகவோ துணையாகவோ பெறுவதற்கு உயிர் என்று கூறலாம். பஞ்சபூதங்களும் ஒன்றை ஒன்று துணைக்கொண்டு இயங்குகின்றன. ஒரு மலர் இருந்தால் அதற்கு உயிராவது செடி. இப்படி எல்லாம் அமைந்து திகழ்வதை நம் அறிவினால் அறிந்து அனுபவத்தால் பெறமுடியும். இவ்வுடலுக்கு ஆதாரம் உயிர். ஆனால் உயிர்க்கு உயிர் யார் என்றால் அவர்தான் இறைவன். "நீராய் உருக்கி என் ஆருயிராய் நின்றானே" என்கிறது சிவபுராணம். இறைச்சக்தி இல்லாத இடமும் நிறையாத பொருளும் இல்லை என்பதே உண்மை.

இந்த உயிரின் முக்கிய குணங்கள் என்ன என்பதே இங்கு விரிகக்கும் ஆய்வு ஆகும்.

உய் + இர் = உயிர்

உய் என்றால் இயங்குதல்

இர் என்றால் இருத்தல்

ஆக உயிர் என்பது நம் உடலில் இருந்து இயக்குவது, நம்மை இருத்துவது, வாழ வைப்பது என்ற பல் பொருளும் பல்சுவையும் பயப்பதாகும்.

இவ்வுயிர் உடலைவிட்டு நீங்கினால் இவ்வுடலுக்கு ஏற்படும் பெயர் பிணம் என்பதாகும்.

பிண் + அம் = பிணம்.

பிண் - என்றால் பிரிவது, பிரிந்த, நீங்குதல் என்று பொருள்படும். அம் - என்றால் அழிவது, கழிவது, சிதைவது என்று பொருள் படும்.

உயிர் உடலைவிட்டு நீங்குகிறது. உயிர்நீங்கிய உடல் அழிக்கப்படுகிறது. அதாவது புதைக்கப்படுகிறது அல்லது எரிக்கப்படுகிறது. ஆக பிணம் என்ற சொல் எவ்வளவு பொருத்தமாய் நமது சமயத்தில் அமைந்து உள்ளது என்பதைக் காணவும். எதற்குமே இல்லாத ஒரு சிறப்பு உயிர்க்கு உண்டு என்றால் அது அழியாமல் இருப்பதே ஆகும். உயிர் என்றும் உள்ள பொருள். அது அநாதி என்பர் சிந்தாந்திகளும் வேதாந்திகளும். இவ்வுயிரை இறைவன் படைக்கின்றானா என்றால் அதுவும் இல்லை. ஆனால் இவ்வுயிரின் உள்ளிருந்து இயக்குகிறான். அதனால்தான் கடவுள் என்ற பெயர் வந்தது. நம்மைப் பிறவிக் கடலில் இருந்து கடக்க வைப்பவர் அதனால்தான் கடவுள் என்று பெயர் வந்தது. ஏன்நம்மை பிறவிக்கடலில் இருந்து கடக்க வைக்க வேண்டும். அது அவரது பெருங்கருணை. இறைவனுக்குள்ள உயரிய குண்ங்களுள் ஒன்று பெருங்கருணைஆகும். அவர்தம் கருணையினால் உயிர்கள் வாழ்கின்றன.

"கருணைக்கடல் பெருக்கி காதலில் நான் உருகி" என்கிறார் ஒரு அடியார் இறைவனைப் பார்த்து. காதல் என்பது இக்காலக்காதல் அல்ல, இறைவன் மேல் கொள்ளும் காதல் ஆகும்.

இறைவனுக்கு எட்டு குணங்கள் உண்டு. 1. தன் வயத்தன் ஆதல், 2. தூய உடம்பினன் ஆதல், 3. முற்றும் உணர்தல், 4.. பேரருள் உடமை, 5. முடிவில் ஆற்றல் உடைமை, 6. வரம்பில் இன்பமுடைமை, 7. இயற்கை உணர்வினன் ஆதல், 8. இயல்பாகவே பாசங்களில் நீங்குதல் என்பனவாகும்.

எனவேதான் திருவள்ளுவரும் "கோளிற் பொறியலி குணமிலி என்குணத்தான் தாளை வணங் காத் தலை" என்று எட்டு குணங்கள் இறைவனுக்கு உள்ளதை நிரூபித்தார். உயிர்க்கு இரண்டு குணத்தை இறைவன் தந்தார். உயிர் சடத்தையும் அறியும், அதே சமயம் இறைவனையும் அறியும். அதாவது சத்து ஆகாமலும், அறியமுடியாத அசத்து ஆகாமலும் சதசத்து ஆகவே உயிர்கள் இருக்கும். அசத்தால் சத்தை அறியவேண்டும். சத்தால் அசத்தை அறிய வேண்டும். இதனை விளக்கும் பாடல் இதுவாகும்.

"சத்து அசத்தைச் சாராது
அசத்து அறியாது
அங்ஙண் இவை உற்றசத
சத்தாம் உயிர்"
(திருவருட்பயன்)

இரும்பை இரும்பு அறியாது. மனிதர்கள் அறிகிறோம் அல்லவா? அதாவது இது ஸ்டீல், இது வார்ப்பு என்று. ஆனால் இந்த உயிர் இரண்டும் அறிவதைப்போல உலகின்கண் படரும் ஒளியையும் அறியும். இருளையும் அறியும் தன்மையது ஆகும்.

ஒளி-இறைவன் திருவருள்

இருள் - ஆணவ மலம்

ஒளியும் இருளும் எப்போதும் இணைந்துதான் இருக்கிறது. மாலை வந்தால் இருள் வரும். காலை வந்தால் ஒளி வரும். ஒளி இருளை மறைக்கும்; இருள் ஒளியை மறைக்கும். உயிர்க்கு திருவருள் இறைவனைக்காட்டி உலகை மறைக்கும் . உயிர்க்கு ஆணவமலம் உலகத்தைக் காட்டி இறைவனை மறைக்கும். இதனைக்கூறும் அழகிய பாடல் இதுவாகும்.

"ஒளியும் இருளும் ஒருமைத்துப் பன்மை
தெளிவு தெளியார் செயல்"
(திருவருட்பயன்)

இப்படி காலநிலைகளால் உயிர் தனக்கு உடமையான இறைவனை அறியமுடியாதவாறும், அறிந்து பற்ற முடியாதவாறும், பற்றி வீடுபேறு அடையமுடியாதவாறும் மறைக்கும் செயலுக்கே மாயை என்ற பேர் வந்தது என்பது விளங்கக் காணலாம். இதனை பாசம் என்றும் கூறுவார்கள். இரண்டும் ஒன்றேயாம்.

பதியினைப்போல் பசு பாசம் அநாதி என்கிறார் திருமூல நாயனார் அவர்கள். இங்கு பசு என்று சொல்லப்படுவதே உயிர் ஆகும். பாசம் என்பது உலக மாயை ஆகும். உயிர்கள் உலக மாயையை வென்று அல்லது கடந்து பதியாகிய இறைவனை அடையவேண்டுவதே கடமையாகும்.

உலகில் உள்ள உயிர்களுக்கு எல்லாம் உயிர் இறைவனே என்பது உண்மை. "எண்ணகத்தாய் உலகுக்குயிரானாய்" என்கிறார் மணிவாசகப்பெருந்தகை. எனவே உயிர் கொண்டு உலவிடும் நாம் உணர்வால் அறிந்து உரியவரான இறைவனோடு கலக்க வேண்டும். அதற்காக வாய்த்ததுதான் இந்த மானிடப்பிறவி. அதில் சந்தேகமே இல்லை. எல்லாவற்றிலும் ஐயப்படும் உயிரின் வாழ்வும் ஐயமாக முடிந்துவிடும். அப்படி முடிந்துவிட்டால் வருவார்கள் எமதூதர்கள் என்பதறிக.

எமதூதர்கள் வந்து எமலோகம் அழைத்துச்செல்வர். ஆம் இந்த உயிர் மூன்றுவிதமான உடல்களை எடுக்கிறது என்று கண்டு தெளிய வேண்டும்.

1. பூத பௌதீக சரீரம்-பூலோகம்(மண்)

2. பூத யாதனா சரீரம்-எமலோகம்

3. பூத சார சரீரம்-தேவலோகம்.

மண்ணுலகில் பூத உடலை நீத்த உயிர், தான் வாழ்ந்த காலத்தில் செய்த நல்வினை தீவினைகளுக்கு ஒப்ப எமலோகத்தையும், தேவலோகத்தையும் அடைகிறது என்பது உறுதி. எமலோகத்தில் துன்பமும், தேவலோகத்தில் உயிர் இன்பமும் துய்க்கிறது.

இம்மண்ணுலகில் உயிர்க்கு அதிகமான துன்பம் தரும் வசதியும் இல்லை. அதுபோல் அதிகமான இன்பம் தரும் வசதியும் இல்லை. இங்கு அனுபவித்த துன்பத்தை நீக்கி மீதம் அனுபவிக்க எமலோகமும், இங்கு அனுபவித்த இன்பம் நீக்கி மீதம் அனுபவிக்க தேவலோகமும் இறைவனால் அமைக்கப்பட்டது ( பதி) என்பதே தெளிவு ஆகும். இதை எப்படி நம்புவது என்பது உங்கள் கேள்வி. மண்ணில் ஒருவன் ஐந்து கொலை செய்துவிடுகிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். ஐந்து உயிர்களைப் பிரித்த அவனது உயிரும் ஐந்து முறை பிரிய வேண்டும். இதுவே இறைவன் நியதி. நீதிமன்றத்தில் நீதிபதியால் மரணதண்டனை விதிக்கப்பட்டு கொலைகாரனின் உயிர் பிரிகிறது. இதன்மூலம் ஒன்று கழிகிறது. மீதம் உள்ள நான்கு முறைக்காக கொலைக்காரன் எமலோகத்தில் நான்கு முறை பூதயாதனா சரீரம் பெற்று நான்குமுறையும் வெட்டிக்கொல்லப்படுகிறான் என்பதாகும். இம்மண்ணுலகில் (பூத உடல்) உயிர்க்கு ஏற்பட்ட அதே உணர்வு எமலோகத்தில் யாதனா சரீரம் பெறும் போது ஏற்பட்டு அதை அனுபவித்தப் பின்புதான் உயிருக்கு விடுதலை ஏற்படுகிறது.

இதுபோலவே வாழ்வில் செய்யும் கருமங்களால் விளைந்த நல்வினைக்கும் சுகபோகங்களை இங்குத் துய்த்துப் பிரிந்த உயிர் மீதமுள்ள சுகபோகங்களை அனுபவிக்க தேவலோகத்தில் பூத சார சரீரம் பெற்றுக்கொள்கிறது. தேவர்களாகவும், கந்தர்வர்களாகவும், கிம்புரர்களாகவும், தேவகணங்களாகவும், இந்திரன், சந்திரன் ஆக இப்படி அமைவது தேவ அமைப்பு ஆகும்.

இதுவும் ஒருவகைப்பிறப்பே. அதனால்தான் 'எல்லாப்பிறப்பும் பிறந்திளைத்தேன்' என்கிறார் மணிவாசகர்.

"ஏற்ற பிறப்பு
எல்லாம் பிறந்தும் இறந்தும்

இருவினையின்

பொல்லாங்கு துய்க்கும்
பொறியிலியேன் - கல்லா

..........................................

அயர அயர அழிய அழியும்
உயிரின் துயரம் உரையேன்"
(-நெஞ்சுவிடுதூது)

அயர்ந்தும், அழிந்தும், ஆகியும் அந்தோ இந்த உயிர்கள் படும் துயரம் சொல்லொண்ணுததது ஆகும். இருவினையின் (நல்வினை, தீவினை) காரணத்தால் உயிர் பிறப்பு எய்துவதே பொல்லாத துயரமன்றே! என்று நெஞ்சம் உருகிக் கண்ணீர் சிந்துகிருர் உமாபதி சிவத்தேவர் அவர்கள். எனவே இப்போதாவது சிந்தியுங்கள். சிந்திக்கும் காலமும் தருணமும் இதுவே ஆகும். உயிர்கள் இறைவன் திருவடி நிழல் எய்துவது ஒன்றே வழியாகும் என்கிருர் அருள்திரு உமாபதி சிவம் அவர்கள்.

"காயத்துள் மெய்ஞானக்கள்
உண்ணமாட்டாதே
மாயக்கள் உண்டார் என்று
உந்தீபற
வறட்டுப் பசுக்கள் என்று உந்தீபற"
(திருவுந்தியார்)

மெய்ஞானக்கள் என்பது இறைவனது திருவடி மலர்களையும், வறட்டுப் பசுக்கள் என்பது உயிர்களை ஆட்டுகின்ற ஆணவ மலத்தையும் குறிக்கும். அதனால்தான எந்தை அருணகிரிப்பெருமான் அவர்கள் "பதி ஞான வாழ்வைத் தருவாயே" என்ருர்கள். பதி - இறைவன். இறைவனோடு நாமும் சேர்ந்து வாழும் வாழ்வே உண்மையில் உயிர்கள் பெறும் வாழ்வாகும் என்பதை வடித்துக் காட்டுகிருர். உயிர் கொண்டிட்ட இவ்வுடலால் ஒரு பயனும் இல்லை என்று உணர்வீர்.

"மங்கை யழுது விழவே யமபடர்கள்
நின்று சருவ மலமே ஒழுக உயிர்
மங்குபொழுது கடிதே மயிலின்
மிசை வரவேணும்"
(திருப்புகழ தொந்திசரிய)

மனைவியும், பிறரும் அழுதுவிழ, நம் உறுப்பில் மலம் வெளிவர இவ்வுயிர் உடல்விட்டு பிரியும் அப்போது நீ மயிலில் வந்து காக்கவேண்டும் என்கிருர். ஞானம் பெற்றவர்களுக்கு இந்த உபாதை இருக்காது என்பது பொருள்.

"ஊங்கிருமல் வந்து வீங்கு குடல்
நொந்து
ஓய்ந்துணர்வழிந்து உயிர்போமுன்"
(திருப்புகழ்-ஆங்குடல்)

உயிர் கொண்ட இவ்வுடலால் இருமல் வரும். குடல் உபாதை ஏற்பட்டு வீங்கும். உணர்வு அழியும். அப்போது உயிர் உடல்விட்டுப் பிரியும். இவ்வுடலில் உயிர் அனுபவிப்பது இத்தகு நிலைகளே. இவ்விதம் நமக்கு வாராதிருக்க இறைவன் திருவடிக்கழல் பற்றுவதே சரியான வழியாகும்.

எல்லா உலகுக்கும், எல்லா உயிர்க்கும் இறைவனே உயிர் ஆகும். அவ் ஒப்பற்ற உயிரானானை இவ்வுயிர்கள் பற்றிப் பயன் பெறுவதே சிறந்த உபாயமாகும் எனக்கண்டு தெளிவோம். பிறர்க்கும் தெரிவிப்போமாக.



## சிங்கிரிகுடி க்ஷேத்திரம்

புதுவையிலிருந்து 10 கிலோமீட்டர் தொலைவில் கடலூர் செல்லும் வழியில் சிங்கிரிகுடி என்னும் ஊரில் ஸ்ரீ நரசிம்மன் எழுந்தருளியிருக்கும் ஒரு அற்புதமான கோயில் அமைந்துள்ளது. இத்திருக்கோயில் கி.பி. 1400-இல் கட்டப்பட்டது. திருக்கம்பங்களில் அழகிய சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இக்கோயிலில் ஸ்ரீ நரசிங்க பெருமாள் 16 புஜங்களுடன் திருவுகிர்களால் இரணியனை சம்ஹாரம் பண்ணும் திருக்கோலத்தில் அத்யத்புதமாக சேவை சாதிக்கிருர். சேவிக்கிறவர்களுக்கு ஆருவமுதத்தை அளிக்கும் அழகிய மூர்த்தி.

இத்தலத்தில் ஸ்ரீமத் அஹோபிலமட ஆஸ்தானத்தில் நான்காவது பட்டத்தில் அபிசித்தராக எழுந்தருளியிருந்த அழகிய சிங்கர் ஸ்ரீவண்சடகோப ஸ்ரீனிவாச மகாதேசிகன் சிலவருஷங்கள் எழுந்தருளியிருந்ததாகவும் அங்கிருந்த வசிஷ்ட குலக்கரையில் அரசமரத்தடியில் தபஸ் செய்துக்கொண்டிருந்ததாகவும அங்கேயே கி.பி. 1453-இல திருநாடு அலங்கரித்ததாகவும் தெரிகிறது.

இப்பொழுது ஸ்ரீ அஹோபிலமடத்தில் 45 வது பட்டத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீவண்சடகோப ஸ்ரீ நாராயண யதீந்திர மகாதேசிகன் 14-7-94 அன்று இத்தலத்திற்கு எழுந்தருளி ஸ்ரீ நரசிம்மனை மங்களாசாசனம் செய்தபின் பிறகு, நாலாவது பட்டத்து அழகிய சிங்கர் ஸ்ரீ நரசிம்மன் திருவடிகளை அடைந்த இடத்தை கடாக்ஷித்து அங்கு அவருக்கு ஞாபகமாக சிலாசாசனம் ஒன்றை அமைத்தார.

அனுப்பியவர் : திரு. பி.ஆர். விஜயராகவாசாரி - புதுவை.

(தொடர் கட்டுரை)

# ஸஹஸ்ர நாமம்

## நம்மாழ்வார் விளக்கம்

திரு. T.S. ராஜகோபாலன்

**123.** மஹாதபா: - பெருமதிப்புள்ள ஞானம் வாய்ந்தவன்.

மிக்க ஞானமூர்த்தியாய வேத விளக்கினை (4-7-10)

ஸர்வக: ஸர்வவித் பாநுர்
விஷ்வக்ஸேநோ ஜநார்தந: ।
வேதோ வேதவித வ்யங்கோ
வேதாங்கோ வேதவித் கவி: ।। 14 ।।

**124.** ஸர்வக: - ஜீவர்களைத் தன்னுள்ளே தரித்துப் பின்பு படைத்து, அழிப்பதும் செய்வதால், எங்கும் பரந்துள்ளவன். (பலம் கூறப்படுகிறது.)

எங்குமுளன் (2-8-9)

**125.** ஸர்வவித் - ஞானததிற்கு உறைவிடமான மனத்திற்குக் காரணமாய், தர்ம உபதேசஞ்செய்து, மனு நால்வரைப் படைத்து, உலகுக்குக் காரணமாவதால், யாவும் உடையவன். ஞானம் குறிப்பு, வ்யூஹத்தில் ப்ரத்யும்நன்.

முனிமாப் பிரம முதல் வித்தாய் உலகம் மூன்றும் முளைப்பித்த (8-10-7)

[முனி-படைப்பு என்பது பற்றி மனனஞ் செய்பவன். வித்தாய்-மூவகைக் காரணங்களுமாகி. ]

**126.** பாநு: - யாவற்றையும் படைத்து, தான் மாறுபாடில்லாமல் விளங்குவோன். வீர்யம் குறிப்பு.

ஒளிவரு முழுநலம் (1-3-2) [ஒளிவரும்]

**127.** விஷ்வக்ஸேந: - ஜீவர்களைக் காப்பதும் தத்வ ஜ்ஞானத்தை அளிப்பதும், மிச்ர ச்ருஷ்டி செய்வதும் இவனது செயலுகள. ஆதலால் எங்கும் அடர்ந்து படர்ந்துள்ள சக்தி வாய்ந்தவன்.



வானத்தும், வானத்துள் உம்பரும்
மண்ணுள்ளும், மண்ணின் கீழ்த் - தானத்தும்
தவிராது நின்றான்றன்னை (4-5-9)

[வானம்-ஆகாசம, உம்பர்-மேலுள்ள உலகங்கள். மண்ணின் கீழ்த்தானம்-பாதாளம்.]

**128.** ஜநார்தந: - தான் செய்யும் காப்பிற்கு இடையூறு செய்பவர்களைக் குலைப்பவன்.

செய்குந் தாவரும் தீமை அடியார்க்குத் தீர்த்து,
அசுரர்க்குத் தீமைகள் செய் குந்தா! (2-6-1)

[செய்கும்-செய்யும், தாவரும் தீமை-கடக்க அரியனவான தீமைகள், குந்தா- அன்பரிடம் பக்ஷபாதத்தால் தூமனம் வாய்ந்தோனே!]

**129.** வேத: - படைத்த ஜீவர்களுக்குக் காரணங்களும் சாஸ்த்ரங்களும் அளிக்கும் ஸங்கர்ஷணன்.

தன்மை பெறுத்தித் தன் தாளிணைக்கீழ்க்
கொள்ளும் அப்பனை (3-7-7)

[தன்மை-இவர்களுக்ககான ஸ்வரூபம், பெறுத்தி-பெறச்செய்து.]

130. வேதவித் - ஐயந்திரிபற வேதப் பொருளை அறிந்தவன்.

வேத விளக்கினை (4-3-10)

[வேதமாகிய விளக்கானவனை.]

131. அவ்யங்க: - சந்தஸ், கல்பம் போன்ற வேதாங்கங்களை உடையவன்

பாவியல் வேத நன்மாலை பலகொண்டு
தேவர்கள் மாமுனிவர் இறைஞ்ச நின்ற (4-2-3)

[பா-சந்தஸ், இயல்-இயல்பாகவுள்ள. மாலை-புருஷஸூக்தம்.]

132. வேதாங்க: - சாகைகள் பல வாய்ந்த வேதங்கள் தனக்கு அங்கமாக உடையவன்.

நாவினுள் நின்று மலரும் ஞானக்கலைகளுக்-
கெல்லாம் ஆவியும் ஆக்கையும் தானே (1-9-8)

133. வேதவித் - வேத தர்மங்களை அனுஷ்டிப்பதைத் தனக்கு ஆராதனமாகக் கொள்வோன், ப்ரத்யும்ந வியூகம்.

134. கவி: - யாவும் நன்கு விளங்கச் செய்பவன்; தான் செய்யும் தர்ம உபதேசம் நன்கு விளங்கச் செய்பவன்.

செய்யேல் தீவினை என்று அருள்செய்யும் (2-9-3)

லோகாத்யக்ஷ: ஸுராத்யக்ஷோ
தர்மாத்யக்ஷ: க்ருதாக்ருத: ।
சதுராத்மா சதுர்வ்யூஹ:
சதுர்தம்ஷ்ட்ரச் சதுர்புஜ: ।। 15 ।।

135. லோகாத்யக்ஷ: - நல்ல நெறியில் நிற்பவர்களது தராதரம் அறிந்தவன் தர்மவான்களுக்கு ஸ்வாமி.

கண்ணுவான் உலகத்துயிர் தேவர்கட்கு எல்லாம் (9-8-5)

136. ஸுராத்யக்ஷ:- இவர்கள் ஆராதிக்கும் தெய்வங்களைப் பற்றி நன்கு அறிந்தவன்.

அமர்ந்த நாதனை, அவரவராகி அவர்க்கு
அருள் அருளும் பரமனை (8-4-10)

137. தர்மாத்யக்ஷ: - இவ்வாறான தர்மங்கள் ஸாதனமாக விளங்குவோன்,

சார்வே தவநெறிக்குத் தாமோதரன் தாள்கள் (10-4-1)

138. க்ருதாக்ருத: - தர்மங்கள் இருவகை: ப்ரவ்ருத்தி (முயல்வது) நிவ்ருத்தி ( பகவானது அருளையே நாடுவது தன் முயற்சியில்லாமல்) இரண்டாவது நித்யமாகப் பயன்படும். இவை இரண்டுமாக விளங்கும் பகவான்.

கலைப்பல் ஞானத்து என் கண்ணனை (3-2-10)

139. சதுராத்மா - வாஸுதேவன், ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன் ஆகிய நான்கு மூர்த்திகளாக இயங்குவோன்.

140. சதுர்வ்யூஹ: - மேலே காட்டியவாறு, தன்னை நான்குபடியாக வகுத்துக் கொண்டு படைத்தல் முதலியன செய்பவன், விழிப்பு, உறக்கம், கனவு, மயக்கம் ஆகிய நான்கையும் செய்விப்பவன்.

141. சதுர்தம்ஷ்ட்ர: வ்யூஹங்களுக்கு ஆதாரமான பரவாஸுதேவ ரூபத்தில் கோரப் பற்கள் நான்கு வாய்ந்தவன்.

142. சதுர்புஜ:- பரவாஸு தேவனாகி நான்கு புயங்கள் வாய்ந்தவன்.

நால்தோள் எந்தாய்! (5-8-7)
பூவியல் நால்தடந்தோளன் (1-3-8)

ப்ராஜிஷ்ணுர் போஜநம் போக்தா
ஸஹிஷ்ணுர் ஜகதாதிஜ: ।
அநகோ விஜயோ ஜேதா
விச்வயோநி: புநர்வஸு: ।। 16 ।।

143. ப்ராஜிஷ்ணு: உபாஸநஞ் செய்வோர்க்குத் தன்னைக் காட்டிக்கொடுப்பவன்.

என் அம்பொற் சுடரே! (5-8-7)

144. போஜநம் - இவர்களால் இன்பமுடன் (போஜனம் போல்) அனுபவிக்கக் கூடியவன்.

உள்கலந்தார்க்கு ஓர் அமுதே (1-6-5)
கோது அவமில் என்கன்னல் கட்டி (2-7-3)

[கோது-வேறுபொருள் கலந்திருப்பது, அவம்-பக்குவம் சரியில்லாததால் குறை. கன்னல்கட்டி- வெல்லம்.]

**145.** போக்தா - பக்தர்கள் அளிப்பதை அன்புடன் ஏற்றுக்கொள்வன். இவர்களை அன்புடன் ஏற்றுக்கொள்பவன் (அனுபவிப்பதற்காக.)

என் அன்பேயோ (10-10-7)
தான் என்னை முற்றப்பருகினான், காட்கரை அப்பன் கடியனே! (9-8-10)

[என்னை நீர்ப்பண்டமாக்கி, நன்கு அனுவித்தான், தாபம் தீர்த்துக்கொள்வதுபோல்]

**146.** ஸஹிஷ்ணு: - இவர்களது குறைகளைக் காணுது பொறுத்துக் கொள்பவன்.

### 3. விஷ்ணு

ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளாகி, நாராயணன் தான் விஷ்ணுவாக, மற்ற இருவரையும் நியமிப்பவன்.

**147.** ஜகதாதிஜ: - மும்மூர்த்திகளுள் முதல்வனான விஷ்ணுவாகி, உலகங்களுக்கெல்லாம் ஆதியானவன்.

சிவனாய் அயனானாய்! (6-9-1)
முதல்தனி வித்தேயோ முழுமூவுலக்கெல்லாம் (10-10-9)

[மூவுலகுகள் போன்ற உலகங்களுக்கெல்லாம் மூவகைக் காரணமுமானவனே!]

**148.** அநக: இவ்வாறு தொடர்பு கொண்டாலும், தோஷங்கள் தன்னைச் சாராவாறு விளங்குவோன், தோஷங்கள் சூரியரைக் கண்ட இருள்போல் அகலும்.

குற்றமில் சீர் கற்று (9-1-7)

[குற்றம் இல் சீர்-உலகில் காணப்படும் இழிவுகள் தன்னை நாடாதவாறு தனி மேன்மை,]

**149.** விஜய: - பிரமன், சிவன் இவர்களது செயல்களாகிய படைப்பையும் அழிப்பையும் தானே இயக்கி வெற்றி பெறுவோன்.

மூவராகிய மூர்த்தியை, முதல் மூவர்க்குமுதல்வன்
தன்னைச் சாமுள்ளன நீக்குவானை (3-6-2)

[சாவம்-சாபம், இவர்களுக்கு நேரும் சாபங்கள், கபாலம் கையிற்கொள்வது போல்வன]

**150.** ஜேதா- தனது விருப்பப்படி நடந்து கொள்ளுமாறு இவர்களை அடக்கி ஆள்பவன்.

இறைவா! என்று வெள்ளேறன், நான்முகன்,
புள்ளூர்தி கழல் பணிந்து ஏற்றுவரே (2-2-10)

[வெள்ஏறன்-சிவன், வெண்ணிறமுள்ள ரிஷபம் வாகனமாக உடையவன், புள்ஊர்தி-விஷ்ணு.]

(தொடரும்)



## நாள் சேவைகள்

| சேவையின் பெயர் | கட்டணத்தொகை ரூ. | அனுமதிக்கப்படும் நபர்களின் எண்ணிக்கை | அனுமதி நேரம் காலை |
|---|---|---|---|
| 1) சுப்ரபாத தரிசனம் | 100-00 | 1 | 2-30 ,, |
| 2) தோமாலா | 200-00 | 1 | 3-30 ,, |
| 3) அர்ச்சனை | 200-00 | 1 | 4-30 ,, |
| 4) தோமாலா மற்றும் அர்ச்சனை (வெள்ளிக்கிழமைகளில்) | 400-00 | 1 | 6-30 ,, |
| 5) அமந்த்ரஞேத்ஸவம் (வெள்ளிக்கிழமைகளில் நடைபெருதது | 600-00 | 1 | 3-30 ,, |
| வெள்ளிக்கிழமைகளில் நடைபெறுவது | 600-00 | 1 | 6-30 ,, |
| 6) நிஜபாத தரிசனம் (வெள்ளிக்கிழமைகளில்) | 100-00 | 1 | 5-30 ,, |
| 7) சிறப்பு நுழைவு தரிசனம் | 30-00 | 1 | ஸர்வ தரிசனம் அனுமதியின் போது |
| 8) ஏகாந்த சேவை | 100-00 | 1 | இரவு 10-30க்குப் பிறகு. |

குறிப்பு :

எண் 1 முதல 6 வரை உள்ள சேவைகளுக்கு 90 நாட்களுக்கு முன்பாகவே முன்பதிவு செய்துகொள்ளலாம்.



# ஆகாய கங்கை

திருமதி. எம். அம்புஜம் முராரி - சேலம்.



## முன்னுரை :

ஆழ்வார்களாலும், நாயன்மார்களாலும் வாழ்நாள் முழுவதும் இறைவனுக்கும், அடியவர்களுக்கும் தொண்டுகளைச் செய்துவந்துள்ளனர். ஆழ்வார்கள் வழிவந்த பெரிய திருமலைநம்பி என்பவர் எம் பெருமானுக்கு ஏதேனும் ஒரு தொண்டு செய்ய வேண்டுமென்று ஏங்கினார். அவருடைய மனக்கருத்தை அறிந்து அவர் தொண்டு செய்வதற்கு திருமாலே எவ்வாறு வழிகாட்டியுள்ளார் என்பதை பற்றி இங்குக் காண்போம்.

## தொண்டு :

ஆளவந்தார் ஒரு சமயம் திருவாய்மொழியின் முப்பத்தாருயிரப்படி வியாக்கியானத்தை அடியார்கட்கு அருளிச்செய்து கொண்டிருந்தார். அவ்வாறு அருளிச்செய்கையில்,

"சுமந்து மாமலர் நீர்சுடர்
தீபம் கொண்
டமர்ந்து வானவர் வானவர்
கோனொடும்
நமன்றெ ழுந்திரு வேங்கடம்
நங்கட்கு
சமன்கொள்வீடு தருந்தடங்குன்றமே"

என்ற பாசுரம் வர அதற்குப் பொருள் கூறிய ஆளவந்தார் அடியவர்களை நோக்கி திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுக்குத் திருமஞ்சனநீர் நாள்தோறும் ஒரு குடம் கொணர்ந்து திருவேங்கடத்தானை மகிழ்விக்கும் தொண்டினை செய்பவர். இக்கூட்டத்தில் உளரோ? என்றார். உடனே பெரிய திருமலைநம்பிகள் எழுந்து ஆளவந்தாரைப் பணிந்து "அடியேனை தொண்டினைச் செய்ய பணித்தருள்க" என்றார். ஆளவந்தாரும் மனமுவந்து பெரிய திருமலை நம்பிகளை வாழ்த்தி திருமலைக்கு வழியனுப்பிவைத்தார்.

## திருமஞ்சன நீர் :

பெரிய திருமலை நம்பிகள் சென்று பெருமானை வணங்கி வந்தார். வெகுதூரத்திலுள்ள "பாபவினாசினி" என்று கூறப்படும் தீர்த்தத்துறைக்குச் சென்று திருமஞ்சனத்திற்கு நீர் கொண்டு வந்து கொடுத்தார்.

## வேடன் வரல் :

ஒருநாள் பெரிய திருமலை நம்பிகள் திருமஞ்சனநீர் கொண்டுவந்து கொண்டிருந்தார். ஒரு வேடன் வில்லுடன் அழகாக நின்று கொண்டிருந்தான். இத்தகைய ஒளியுடைய முகத்தையுடையவன் வேடனாக இருக்க மாட்டான் என்று சந்தேகம் கொண்டார் நம்பிகள். தேவனோ அல்லது குகப்பெருமானோ என்று எண்ணிக் கொண்டு நடக்கலானார். அப்பொழுது அவ்வேடன் எதிரில் வந்து "எனக்கு மிக்க தாகம் உள்ளது. தண்ணீர் வேண்டும்" என்றான். அதற்கு நம்பிகள் உடனே 'இது வேங்கடவன் திருமஞ்சனத்திற்குக் கொண்டு செல்லும் நீர். இதிலிருந்து எப்படிக் கொடுக்க முடியும்' என்றார். அதற்கு வேடன் "தாதா நீங்கள் எனக்கு உதவினால் வேங்கடவன் தனக்கு உதவியதாகவே எண்ணுவான்" என்றான்.

"நீ கூறியது நன்று. ஆனால் எங்கள் குருநாதர் கட்டளை இல்லையே! நான் என் செய்வேன்!" என்று கூறி மேலே நடக்கலானார். வேடன் அவருக்குத் தெரியாமல் அவர் பின் சென்று அவர் குடத்தை அம்பால் துளைத்து அக்குடத்திலுள்ள நீர் முழுவதையும் பருகிவிட்டான். அக்குடத்தின் கனம் குறைந்தது கண்டு நம்பிகள் குடத்தை இறக்கிப்பார்க்க அதில் நீரில்லை. "வேடனே! நீ திருமஞ்சன நீரை குடித்துவிட்டாயே! நீ இந்த வேங்கடமலையில் வாழ்ந்தும் இப்படிச் செய்யலாமா! நான் மீண்டும் சென்று நீர் எடுத்து வரலாம் என்றால் பெருமாளின் மஞ்சன வேளை தவறிப்போகுமே! நீ இப்படிச் செய்துவிட்டாயே" என்று கூறி மீண்டும் நீர் கொண்டுவர புறப்பட்டார். வேடன் நம்பிகளை அழைத்து "தாதா! நீங்கள் அவ்வளவு தூரம் சென்று நீர் கொண்டுவர வேண்டியதில்லை. இங்கேயே தீர்த்தத்தை உண்டாக்கித் தருகிறேன்" என்று தன் கையிலுள்ள வில்லை வளைத்து அம்பைப் பூட்டி ஒருபாறையின் நடுப்பாகத்தை இலக்காகக் கொண்டு எய்தான். உடனே பாறையிலிருந்து நீரானது வெள்ளம் போல பெருகி வரலாயிற்று.

பெரிய திருமலைநம்பிகள் ஆச்சரியம் அடைந்து இவன் வேடன் அல்லன், வேங்கடவனே! என்று கருதி தம்மை மறந்திருந்தார். திருமலை நாதன் திருமகள் மார்பில் பொருந்தியிருக்க கருடன் மீது வந்து சேவை செய்தருளினார்.

"அறியாக் காலத்துள்ளே
அடிமைக்கண் அன்பு செய்
வித்தறியா மாமயத் தடியேனை!
வைத்தாயால்
அறியாமைக் குறளால்
நிலம்மாவலி வேண்டியவன்
அறியாமை வஞ்சித்தாய்
எனதானயுள் கலந்தே"

என்று போற்றினார். 'அன்புடையாய்! இனி இதிலிருந்தே தீர்த்தம் கொணர்ந்து கொடுப்பாய்! என்று கூறி மறைந்தருளினார். அன்றையிலிருந்து அதற்கு ஆகாய கங்கை என்னும் பெயர் வழங்கலாயிற்று. எம்பெருமான் நம்பிகளை "தாதா" என்று அழைத்ததால் 'தாதாசாரியார், தாதா தேசிகர்' என்னும் பெயர்கள் வழங்கலாயின.

## முடிவுரை :

ஆழ்வார் வழிவந்த வழிக் குரவராகிய பெரிய நம்பிகளைப் போல நாமும் எம்பெருமானது திருவடிகளுக்கு ஏதேனும் ஒரு தொண்டு செய்து வேங்கடநாதன் அருளைப் பெறுவோமாக!

"அரியகலை நுண்பொருள்கள்
நன்குபேணி
ஓதியுணர்ந் துளங்கொண்ட
கீர்த்தியாளர்
வீரியருவி வேங்கடத்தின் உறையும்
வாழ்க்கை
விழைந்தோற்றம் இனிதுறைதோர்
பாலோர்பேசும்
அரியகுணத் திளையாழ்வார்
தம்மை யீன்ற
அன்னையா ருடன்பிறந்தோர்
அன்பின் மிக்கோர்
பெரிய திருமலை நம்பி என்னும்
சீரார்
பேரார்ந்த பெரியவர்தாள்
போற்றுவோமே"



## வைகுண்டம் எவ்வளவு தூரம்?

தஞ்சாவூர் அரசர் இரண்டு சேவகர்களை 'இடைக்காட்டூர் சித்தர்' என்ற துறவியிடம் அனுப்பி, "வைகுண்டம் எவ்வளவு தூரம்?" என்று கேலியாக வினவினார்.

சேவகர்கள் இந்தக் கேள்வியைக் கேட்டதும், சித்தர் "வைகுண்டம் கூப்பிடுதூரம் என்று உங்கள் அரசனிடம் சொல்லுங்கள்" என்று முகத்தில் அறைந்தாற்போல் பதில் சொல்லி அனுப்பினார்.

இதைக்கேட்ட அரசன் சித்தரிடமே வந்து விளக்கம் கேட்டான்.

"கஜேந்திரன் என்ற யானை 'ஆதிமூலமே' என்று கதறியவுடன் வைகுண்டத்திலிருந்து பகவான் உடனே வந்து அந்த யானையை முதலையிடமிருந்து காப்பாற்றவில்லையா? ஆகவேதான் அப்படிச் சொன்னேன்" என்று சித்தர் விளக்கம் கூறினார்.

அரசன் சித்தரது காலில் விழுந்து தன் கேள்விக்கு மன்னிப்புக் கோரினான்.

--ஸ்ரீவத்ஸ ஜயராம சர்மா

அனுப்பியவர்: --கமலா மாரியப்பன் - கோவை.

## அறுகம்புல் சாறு அருந்துங்கள்

அனைத்து நோய்களையும் நீக்கும், உடலை நன்னிலை ஆக்கும் அருஞ்சக்தி கொண்டது அறுகம்புல்.

100 கிராம் அறுகம்புல் இலைகளைத் தூய்மைசெய்து எடுத்துக்கொண்டு, 200 மி. லி. தண்ணீர் விட்டு அரைத்துச் சாறுக்கி, வடிகட்டி, அதிகாலையில் வெறும் வயிற்றில் குடிக்கவும். இதுபோல் 40 நாட்கள் குடிக்கவும்.

அதிக இரத்தக்கொதிப்பு, சர்க்கரை வியாதி, குடல்புண், பெரும்பாடு, வெள்ளைப்போக்கு போன்ற பல்வேறு நோய்கள் குணமாகும்.

இன்றே அறுகம்புல் அமுதம் அருந்த ஆரம்பித்துவிட்டீர்களா? அறுகம்புல் சாறு அருந்துங்கள். அருஞ்சுகம் அடையுங்கள்.

--டாக்டர் கோ. மணிவாசகன் - தேலூர்.

'வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன்' என்று போற்றப்படும் சுவாமி நம்மாழ்வார், ரிக்வேத சாரமாகத் திருவிருத்தத்தையும், யஜுர் வேத சாரமாகக் திருவாசிரியத்தையும், சாமவேத சாரமாகத் திருவாய்மொழியையும், அதர்வணவேத சாரமாகப் பெரிய திருவந்தாதியையும் அருளிச்செய்தார்.

உத்தமரான பாகவதர்கள் இவ்வுலகில் உண்டி, உடைகளை நாடி ஓடாமல் பூவண்ணனான திருமகள் கேள்வனது கலியாண குணங்களையே புகழ்ந்து பேச வேண்டும் என்று பெரிய திருவந்தாதியின் முதற்பாசுரத்தில் தம் நெஞ்சுக்கு உணர்த்துவது போல் மன்பதைக்கு எடுத்துரைக்கிறார். பெற்றதாய் போல வந்த பூதனையின் பெரு முலையூடு உயிரையும் வற்ற வாங்கி உண்ட வஞ்சகக் கள்வன் கண்ணன் தாள் வாழ்த்துவதே வழக்கு என்றும், அவனே தாய், தந்தை, உறவினர் என்பதையும், "பெற்றதாய் நீயே! பிறப்பித்த தந்தை நீ! மற்றையாவரும் நீ!" என்று அறுதியிடுகிறார். பஞ்சபூதங்களாகத் திகழ்பவன் திருமால் என்பதை, 'பாருநீ வானுநீ! காலுநீ, தீயுநீ, நீரும் நீயாய் நின்ற நீ!' என்கிறார்.

'நாமாம்ஸ சக்ஷுரபி வீக்ஷதே தம்' (பகவானை மாமிசக் கண்ணால் காணமுடியாது) என்று வேதம் கூறுகிறபடியே, எவராலும் புறக்கண்ணால் காணமுடியாத இறைவனை அகக்கண்ணால் காண முயன்றால் காணலாம் என்பதை,

"நெஞ்சென்னும் உட்கண்ணால்
காணும் உணர்ந்து"

என்கிறார். ஆம்! ஞானியர்தம் அகக்கண்ணால் கண்டு அனுபவித்தனர். வேதங்களில் 'ஸ', என்றும் 'தத்' என்றும் விளக்கப்படும் தெய்வம் கண்ணனே என்று தெளிந்து அவனைச் சரணாகதியடைய வேண்டும் என்பதை,

"அவனாம் அவனே எனத் தெளிந்து
கண்ணனுக்கே
தீர்ந்தால் அவனே எவனேலுமாம்"

என்கிறார்.

"என் துழாய்மாயனை ஏசியேயாயினும் பேசியே உன் பிழையைப் போக்குவாய்" என்கிறார். தடைகள் மலிந்த இம்மண்ணுலகில் வாழ்ந்து பகவத்குணனுபவம் செய்வதை விட, தடைகளற்ற வைகுந்தத்தில் அனுபவிப்பதில் பெருமையில்லை என்று விளக்குகிறார்.

"நின்புகழில் வைகும்தம்
சிந்தையிலும் மற்றினிதோ!
நீ அவர்க்கு வைகுந்த
மென்றருளும் வான்"

என்பது அவர் திருவாக்கு.

நாரணனை, மாதவனை, கேசவனைச் சொல்மாலையால் சூட்டினால் கலந்து நலியும் கடுந்துயரை அகற்றுவான் என்பார். அடியார்களின் இதயத் தாமரை தான் பகவானுக்கு உகந்த இடம் என்பார்.

ஸ்ரீமந் நாராயணனே முதல்வன் என்றும், சிவபிரான் பிரமனிடம் தோன்றியவன் என்றும், பிரமன் திருமாலின் நாபி கமலத்தில் உதித்தவன் என்றும் தெளிவாக விளக்குவார்.

"முதலாம் திருவுருவம் மூன்றென்பர்
ஒன்றே
முதலாகும் மூன்றுக்கும் என்பர்-
முதல்வா
நிகரிலகு காருருவா நின்னகத்தன்றே
புகரிலகு தாமரையின் பூ?"

என்பது அவர் திருவாக்கு.

"உந்திமேல் நான்முகனைப்
படைத்தான்"

என்று கலியனும்,

"நான்முகனை நாராயணன்
படைத்தான்
நான்முகனும் தான்முகமாய்
சங்கரனைத்தான் படைத்தான்"

என்று திருமழிசையாழ்வாரும் குறிப்பிடுவர்.

சங்க இலக்கியமான பரிபாடலும்,

"ஐந்தலை உரிய அணங்குடை
அருந்திறல்
மைந்துடை ஒருவனும்
மடங்கலும் நீ
நலம் முழுது அளஇல புகர்
அறு காட்சிப்
புலமும் பூவனும் நாற்றமும் நீ"

என்றும்,

"இருவர்தாதை இலங்குபூண் மாஅல்"

என்றும்,

"தாமரைப்பூவினுள் பிறந்தோனும்
தாதையும்
நீ எனமொழியுமால் அந்தணர்
அருமறை"



# "பெரிய திருவந்தாதி"

டாக்டர் ஏ.வி. ரெங்காச்சாரியார், - ஆழ்வார்திருநகரி.



என்றும் போற்றுவதை ஒப்பிட்டு உணரவேண்டும்.

பத்துப் பாட்டு வரிசையிலுள்ள பெரும்பாணுற்றுப்படையும்,

“நீல்நிற உருவின் நெடியோன்
கொப்பூழ்
நான்முக ஒருவற்பயந்த
பல் இதழ்த்
தாமரைப் பொகுட்டின்
கண்வரத்தோன்றி”
(அடி 402 - 404)

என்று குறிப்பிடுகிறது.

இம்மண்ணுலகில் எப்பிறவியில் பிறந்தாலும், எந்த இழிதொழில் செய்தாலும் கண்ணனுக்கு அடிமைப்பட்டிருந்தால் அவர்கள் நித்ய சூரிகளுக்கு நிகராவார்கள் என்கிறுர். அடியாரின் உள்ளத்தில் செவிவழி புகுந்து இறைவன் நிறைந்திருப்பதால் பக்தனே பெரியவன் என்கிறுர்.

காசினியில் அனைவரும் கார் கலந்த மேனியான், கைகலந்த ஆழியான், பார் கலந்த பல் வயிற்றுன், பாம்பணையானான திருமாலின் சீர்கலந்த சொற்களைப் பேசினால் கைகழலா நேமியானான அவன் வினைகளை அகற்றி மக்களை (அடியாரை) வளமாக வாழச்செய்வான் என்று உள்ளப்பூரிப்புடன் ஆழ்வார் குறிப்பிடுகிறுர். இது அவர நிதர்சனமாகக் கண்ட முடிவு.

திருமாலின் மொய்கழல்களை ஏத்த (புகழ்ந்துபாட) நாம் முயலவேண்டும் என்பதே ஆழ்வாரின் அறிவுரை.

அதர்வண வேத ஸாரமான பெரிய திருவந்தாதி உண்மையில் சித்தத்திற்கு அருமருந்தாகத் திகழும் பெருமைமிக்க அந்தாதியே என்பது உறுதி. நாமும் ஆழ்வாரது அடிச்சுவட்டிற் சென்று, திருமாலை வழிபட்டு, வாழ்வாங்கு வாழ முயற்சிப்போமாக.

☆☆☆☆☆☆☆☆☆

# செய்திச் சுருக்கம்

## படிவிழா

கடந்த 25 வருடங்களாகத் திருப்பதி திருமலை திருப்படித் திருவிழா திருப்பதியிலும், திருமலையிலும் வெகுச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. இவ்வகையில் 26-ஆவது திருப்படித் திருவிழா மூன்று நாட்களுக்கு அண்மையில் நடைபெற்றது. 150 பஜனைக் குழுவினரைச் சார்ந்த சுமார் 5000 பக்தர்கள் இத்திருவிழாப்படி விழாவில் கலந்து கொண்டனர். முதல்நாளன்று இப்பஜனைக் குழுவினர் தங்களுடைய பஜனை நிகழ்ச்சிகளைத் திருச்சானூர் ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயிலில் முதலில் தொடங்கினார்கள். பின்னர் அன்று மாலை, திருப்பதி ஸ்ரீஅன்னமாசார்யா கலாமந்திரத்தில் கூட்டு பஜனை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இவ்விழாவில் தி.தி. தேவஸ்தான முக்கிய அலுவலர்கள் பங்கேற்று உரையாற்றினர். முதல் நாள் மூன்று வேளையிலும் பக்தர்களுக்கு 'சென்னை ஓம் முருகாஸ்ரம சுவாமி' அன்பர்களின் உதவியால் இலவச அன்னதான ஏற்பாடு செய்யப்பட்டது. அடுத்தநாளன்று, திருப்பதி 'அலிபிரி' மலையடிவாரத்திலிருந்து பஜனைக் குழுவினர் நடந்து மலையேறினர். இதுபோது விளாப்பாக்கம் சம்பத் குழுவினரின் நாதஸ்வர இன்னிசை நிகழ்ச்சியும், திரு. டி.எஸ். அனந்த நாராயண அடிகளாரின் பஜனைப்பாடல் நிகழ்ச்சியும் நடைபெற்றன. இந்நிகழ்ச்சிகளின் போது தி.தி.தேவஸ்தான பொதுதஜனத் தொடர்பு அலுவலர் திரு. சிவாஜி, திவ்ய பிரபந்த திட்டத்துறை இயக்குநர் திரு. பொன். சௌரிராஜன் ஆகியோர் பஜனைக்குழுவினரை வரவேற்றனர்.

அன்று மதியம் திருமலையில் மேற்படி பஜனைக்குழுவினரை தி.தி. தேவஸ்தான திருமலை இணைச் செயலாட்சித் தலைவர் பாலசுப்பிரமண்யம், ஐ.ஏ.எஸ். திருமலையில் எதிர்கொண்டு வரவேற்றார். மலைவழிச்சாலையில் பக்தர்களுக்கு காஞ்சீபுரம் ஸ்ரீனிவாசன், திருமலை ஸ்ரீநிவாச ஐயங்கார் ஆகியோர் ஆதரவில் பிரஸாதங்கள் விநியோகிக்கப்பட்டன. மூன்றும் நாளன்று திருமலை ஆஸ்தான மண்டபத்தில் சமயச் சொற்பொழிவுகள், இசை நிகழ்ச்சிகள் போன்றன நடைபெற்றன. மேலும் நிகழ்ச்சிகள் இறுதியில் தேர்ந்தெடுக்கப்பட்ட நான்கு பஜனைக் குழுவினர்களுக்கு சுருதிப் பெட்டியும், 25 பஜனைக்குழுவினர்களுக்குத் தலா இரண்டு ஜதை தாளங்களும் வழங்கப்பட்டன.

தகவல்: அ.செ. நரசிம்மன்

* * *

## திருமண மண்டபம்

ஆந்திர மாநிலத் தலைநகரான ஹைதராபாத்தில், தேவஸ்தானத்தாரின் தகவல் நிலையமான 'பாலாஜி பவன்' கட்டிடத்திற்கு அருகே ரூ. 3 கோடிச் செலவில் 'திருநிலையம்' எனும் பெயரில் புதியதாகக் கட்டப்பட்டத் திருமண மண்டபத்தினை ஆந்திர மாநில முதல்வர் திரு. என்.டி. ராமாராவ் அவர்கள் அண்மையில் திறந்து வைத்தார். நாள் ஒன்றுக்கு ரூ. 12,000 வாடகைக் கட்டணமாகச் செலுத்தப்படும் இம்மண்டபத்தின் அடித்தளமானது 1400 நபர்கள் அமரக்கூ



டிய வகையிலும், ஒரே சமயத்தில் 500 நபர்கள் உணவருந்தக் கூடிய வகையிலும் அமைந்து, பல்வேறு நவீன வசதிகளுடன் கூடிய அறைகளையும், வாகன நிறுத்த வசதிகளையும் பெற்றுத் திகழ்கின்றது. இம்மண்டபத்தின் மேலிரண்டு தளங்கள் தி.தி. தேவஸ்தானத்தாரின் சமய, சமூக, நிகழ்ச்சிகள் நடைபெறும் வகையில் ஒதுக்கப்பட்டுள்ளன. திருமண மண்டபத்தினைத் திறந்து வைத்துப் பேசுகையில் இத்திருநிலையத்தில் நாளும் நடைபெறும் சமய நிகழ்ச்சிகளில் பொதுமக்கள் கலந்து கொண்டு இந்தியப்பண்பாடு, சமய கலாசாரம் போன்றவற்றின் பெருமையை அறிந்து கொண்டு வாழ்க்கையில் முன்னேற தங்களைப் பண்படுத்திக்கொள்ள வேண்டும் என்று முதல்வர் அவர்கள் குறிப்பிட்டார்.

இதுபோது ஸ்ரீராமகிருஷ்ண மடத்தின் துணைத்தலைவர் சுவாமி ரங்கனானந்தா அவர்களும் மாநில முதல்வரின் துணைவியார் திருமதி. லக்ஷ்மி பார்வதி, ஆந்திர மாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. சிம்மாத்ரி சத்யநாராயண, பஞ்சாயத் ராஜ் துறை அமைச்சர் திரு. கே. ராமச்சந்திரராவ் ஆகியோரும் பங்கேற்று உரையாற்றினர். விழாவின் சிறப்பம்சமாக திருமதி. ஷோபாராஜு அவர்களின் அன்னமய்யாபாடல்கள் இடம்பெற்ற இன்னிசைக் கச்சேரி நிகழ்ச்சியும் நடைபெற்றது.

* * *

## ஜெயந்தி விழா

கி.பி. 15ஆம் நூற்றுண்டில் வாழ்ந்து தெலுங்கில் சுமார் 32000 பக்திப் பாடல்களை இயற்றிய தாளப்பாக்கம் ஸ்ரீஅன்னமாசார்யாவின் 587ஆவது பிறந்தநாள்விழா சென்ற மாதம் வெகுச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இது சம்பந்தமாக திருமலை ஆஸ்தான மண்டபத்தில் ஏற்பாடு செய்யப்பட்ட பல்வேறு நிகழ்ச்சிகளில் தி.தி. தேவஸ்தான



செயலாட்சித் தலைவர் திரு. என். ரமேஷ்குமார், அன்னமாசார்ய திட்டத்துறை இயக்குனர் திரு. எம். மோகன், மாநில அரசின் முதன்மை அலுவலர் ஆகியோர் உரையாற்றினர். இவ்விழாவின் சிறப்பம்சமாக திருமதி. எம்.எஸ். சுப்புலட்சுமி அவர்களின் இன்னிசைக் கச்சேரி அமைந்தது. அன்று மாலை மற்றும் அடுத்தநாள் காலையிலும் மாலையிலும், இவ் ஜெயந்தி விழா நிகழ்ச்சிகள் தொடர்ந்து திருப்பதியிலுள்ள ஸ்ரீஅன்னமாசார்யா கலாமந்திரத்தில் நடைபெற்றன.

* * *



## ஸ்ரீபத்மாவதி பரிணயம்

ஸ்ரீபத்மாவதி பரிணயம் எனும் கோயில் நிகழ்ச்சி திருமலையிலுள்ள ஸ்ரீநாராயணகிரி தோட்டத்தில் வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. இதுபோது நன்கு அலங்கரிக்கப்பட்ட கோயில் உத்ஸவமூர்த்திகள் திருவீதிவலமாகக் கொண



ரப்பட்டு, நாராயணகிரி தோட்டத்தில் எழுந்தருளச் செய்தனர். அங்குத் தாயாரின் திருக்கல்யாண நிகழ்ச்சி சிறப்பாக நடைபெற்றது. இந்நிகழ்ச்சியில் ரூ. 3000 செலுத்தி எட்டு கிருஹஸ்தர்கள் கலந்து கொண்டனர். மேலும் இந்நிகழ்ச்சிகள் யாவும், தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர், திருமலை இணைச் செயலாட்சித் தலைவர், திருமலை சிறப்பு நிலை உதவி செயலாட்சித் தலைவர் ஆகியோரின் மேற்பார்வையில் நன்கு நடைபெற்றன.

* * *

## பாராட்டு

ஒவ்வொரு வருடமும் மே மாதம் முதல்நாளன்று, ஆந்திர மாநிலத்திலுள்ள தலைசிறந்த தொழிலாளர் - ஊழியர் தலைவர்கள் 'ஸ்ரம சக்தி' எனும் பட்டம் அளிக்கப்பட்டு ஆந்திர மாநில அரசினால் தலைநகரில் முதல்வர் அவர்களால் பாராட்டப்பெறுவர். இவ்வகையில் தி.தி. தேவஸ்தான ஊழியர்கள் சங்கத்தின் தலைவரும், தேவஸ்தானத்தில் கண்காணிப்பாளர் பதவி வகிப்பவருமான திரு. சந்திர சேகர நாயுடு அவர்களுக்கு இவ்வாண்டுக்குரிய 'ஸ்ரமசக்தி' பட்டத்தை ஆந்திரமாநில முதல்வர் திரு. என்.டி. ராமாராவ் அளித்துப் பாராட்டினார்.

* * *

## திருமலையில்

திருமலையில், ஆந்திர மாநில அரசு பேருந்து போக்குவரத்துத் துறையினரால் 5 மணி நேரங்களுக்குச் செல்லுபடியாகும் வகையில் விற்கப் படும் ரூ. 5/- (நபர் ஒருவருக்கு) பயணச் சீட்டினை வாங்கினால், திருமலையில் பாப விநாசம், ஆகாச கங்கை, ஸ்ரீவேணுகோபால சுவாமி கோயில் ஆகிய இடங்களுக்கு யாத்திரிகர்கள் பேருந்தில் சென்று வரலாம்.

* * *

## ஜீயர் சுவாமிகள்

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருவேங்கட ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி பெரிய ஜீயர் ஆஸ்தானத்தையும், திருப்பதி ஸ்ரீ உ.வே. கொட்டடி சுந்தராசார்ய ஸ்வாமி சின்ன



ஜீயர் ஆஸ்தானத்தையும் 3-5-95 அன்று அலங்கரித்தனர்.

"ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டும்நாம்" என்று பாடிய நம்மாழ்வாரின் மனோரதமான கைங்கர்யத்தை - அத்தாணிச் சேவகத்தை இவ்விருஸ்வாமிகளும் அநவரதமும் நடத்தி வருகின்றனர்.

தங்சமயம் பெரிய ஜீயர் ஸ்வாமியாக ஆஸ்தானம் வகித்த திருவேங்கடராமாநுஜ ஜீயர் ஏழுவருட காலம் சிறிய ஜீயர் பட்டம் வகித்தவர். ஆத்ம குணபூர்த்தியுடைய இந்த ஸ்வாமி திருமலை திருப்பதி ஸந்நிதிகளில் 60 வருட் காலத்திற்கும் மேல் அத்யாபாக கைங்கர்யம் செய்து சின்ன ஜீயராக எழுந்தருளினர். மேலும் திருப்பதி நம்மாழ்வார் ஸந்நிதி ஆதீன பரம்பரை தர்ம கர்த்தாவான இந்த் ஸ்வாமி 50 வருடத்திற்கு மேல் நம்மாழ்வார் ஸந்நிதி திருவாராதனம் செய்து வந்தவர். சிறிய ஜீயராக இருந்த போது பலப்பல திவ்ய தேசங்களுக்கும் மற்றும் பல நற்செய்கைகளுக்கும் பொருளுதவி வழங்கியவர். திருமலை திருப்பதி சந்நதி கைங்கர்யங்களைச் செவ்வனே நடத்தி வரும் இந்த ஸ்வாமி செய்த பல கைங்கர்யங்களில் ஸ்ரீவரதராஜ ஸ்வாமி, பெருந்தேவித் தாயார், ஸ்ரீசக்கரத்தாழ்வார் ஆகிய திவ்ய மங்கள விக்ரஹங்களை எழுந்தருளப்பண்ணி ஒரு கோயிலை நிர்மாணித்ததைத் திருப்பதி பக்த சிகாமணிகள் உச்சிமேல் வைத்துக் கொண்டாடுவது வாசாமகோசரம்.

சிறிய ஜீயராக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத் பரமஹம் ஸேத்தியாதி ஸ்ரீரங்கராமாநுஜ ஜீயர் ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் ஸ்ரீஉ.வே. கொட்டடி சுந்தரராசார்ய ஸ்வாமி என்ற திருநாமத்துடன் திருமலைத் திருப்பதி வாஸியாய் இருந்தவர். வேத பண்டிதராக பல வருட காலம் பணிபுரிந்த ஸ்ரீஉ.வே.கொ. ஸ்ரீநிவாசார்ய ஸ்வாமியின் திருக்குமாரரான இந்த ஸ்வாமி ஸ்ரீஉ.வே.கொ.க. சண்டமாருதம் ஸ்ரீனிவாசாசார்ய ஸ்வாமியிடம் பஞ்ச ஸம்ஸ்காரம் பெற்று, திவ்ய ப்ரபந்த அதிகாரியாயும், நம் ஸம்பிரதாய துரந்த ராயும் பாஞ்சராத்ர ஆகம பண்டிதராயுமிருந்த ஸ்ரீஉ.வே. கச்சிக்கிடாம்பி யாமுநாசார்ய ஸ்வாமியிடம் திவ்ய ப்ரபந்தத்தைக் கசடறககறறர. இநத ஸவாமியிடமே திருப்பதி ஸ்ரீஉ.வே. தி.அ. க்ருஷ்ணமாச்சார்ய ஸ்வாமி, மற்றும் அவர் திருத்தம்பி ஸ்ரீஉ.வே. தி.அ. கோபாலாசார்ய ஸ்வாமி ஆகியோரோடு பகவத் விஷயம் காலக்ஷேபம் செய்தவர். ஸ்ரீஉ.வே.தி.அ. க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியிடம் ரகஸ்ய க்ரந்தங்களையும் திவ்யப்ரபந்த வ்யாக்யானங்களையும் காலக்ஷேபமாகக் கேட்டவர். திருக்கண்ணபுரம் பெரிய ஜீயர் ஸ்வாமி காலத்தில் திருமலை திருப்பதியில் அத்யாபகராகவும் கைங்கர்யம் செய்தவர். பெரிய ஜீயர் ஸ்வாமி (சாது ஸ்வாமி) திறத்து பகவத் விஷயத்தில் பல பகுதிகள் காலக்ஷேபமாகத் திருமலையில் கேட்டவர். அந்த ஸ்வாமியுடன் திவ்யதேச யாத்திரை செய்த பெருமையும் உடையவர்.

ஸ்ரீஉ.வே. யாமுநாசார்ய ஸ்வாமி கடாக்ஷத்துக்கு இலக்காகித் திருமலை திருப்பதி தேவஸ்தான வேதபாடசாலையில் திவ்ய ப்ரபந்த உபாத்யாயராக 1964 முதல் 28 வருட காலம் பணி புரிந்தவர். இதில் எட்டு வருடகாலம் பாடசாலையிலும், வித்யா கேந்திரத்திலும் பொறுப்பு முதல்வராக பணிபுரிந்தவர். ஆத்ம குணபூர்த்தியுடைய இவர் பூர்வாச்ரமத்திலிருந்தே தற்சமயம் எழுந்தருளியிருக்கும் பெரிய ஜீயர் ஸ்வாமியின் மிகுதியான அன்புக்குப் பாத்திரமானவர். பாடசாலையிலிருக்கும்போது வேத வேதாந்த இதிகாச, புராண ஆகம மற்றும் திவ்யப்ரபந்த வித்வான்களை நாற்றிசையிலிருந்தும் வரவழைத்துப் பலவேத சாஸ்திர ஸதஸ்ஸுக்களை வைணவ உலகம் உகக்கும்படி நடத்திய பெருமை இந்த ஸ்வாமியைச் சாரும்.

இவ்விரு ஜீயர் ஸ்வாமிகளும் பல வருடகாலம் எழுந்தருளியிருந்து பல கைங்கர்யங்களைச் செய்துவர பூவார் கழலிணை வேண்டுகிறோம்.

## திருத்தம்

'மே' ஸப்தகிரி இதழ் 10-ஆம் பக்கத்தில், எங்களுடைய முன்னாள் பத்திரிகையாசிரியர் திரு. கே. சுப்பாராவ் அவர்களின் மறைவு ஒட்டி பிரசுரிக்கப்பட்ட 'கண்ணீரஞ்சலி' எனும் பெட்டிச் சேதியில் திரு. கே. சுப்பாராவ் அவர்கள் 30-6-95 அன்று ஓய்வு பெற்றூர் என்று தவறுதலாகக் குறிக்கபெற்றுள்ளது. அந்நாள் 30-6-94 என்று இருத்தல் வேண்டும். ஏற்பட்ட தவறுக்கு மன்னிக்க வேண்டுகிறோம்.

--ஆசிரியர்

Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor and
Printed at T.T.D. Press by P. Mohan Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

